

ஸ்ரீ:

ஸ்ரீஸூக்திமாலா மலர்-18

பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்த

# சிறிய திருமடல் வ்யாக்யானம்

[திவ்யப்ரபந்தஸார வ்யாக்யானத்துடன்]

[ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம் வெளியீடு]

[ மூன்றாம் பதிப்பு ]



பதிப்பாசிரியர் & கிடைக்குமிடம்:—

**ஸ்ரீ. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் ஸ்வாமி,**

ஆசிரியர்:— ''ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்ஶனம்''

*3, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-17.*

ஸ்ரீ. ரா. ஸ்ரீ. கி. ஸ்ரீநிவாஸய்யங்கார் குடும்ப தர்ம சொத்துக்களின் ஆதரவில் வெளிவருகிறது.



விலை 30/- 1995 தபால் தனி

LIBRA OFFSET PRINTERS, THANJAVUR Ph. 22767

# முகவுரை



திருமங்கையாழ்வார் அருளிய திவ்யப்ரபந்தங்களில் பெரிய திருமொழி முதலாவது. நிர்ஹேதுகக்ருபையால் அவன் தன்னைக் காட்டக் கண்ட ஆழ்வார், மாநஸாநுபவத்தாலே முதல் ப்ரபந்தமான பெரிய திருமொழியிலும், இரண்டாவது ப்ரபந்தமான திருக்குறுந்தாண்டகத்திலும் அவனை அநுபவித்தார்; அதில் திருப்தியுறாமல், வெளியிந்திரியங்களாலும் அவனைக்கண்டு, பேசிக் கட்டித் தழுவிப்பரிமாற வேண்டும் என்று ஆசைப்பட்டு அதற்காக மூன்றாவது ப்ரபந்தமான திருவெழுகூற்றிருக்கையிலே திருக்குடந்தையிலே ஶரணம் புகுந்தார். அதனாலும் விருப்பம் நிறைவேறாமையாலே, "தன் ஸ்வரூபமாகிற பாரதந்திரியத்தை அழித்துக்கொண்டாவது அவனை வரவழைப்போம்" என்கிற த்வரை விஞ்சி, நாலாவது ஐந்தாவது ப்ரபந்தங்களாகிய சிறியதிருமடல், பெரிய திருமடல் என்னும் இரு ப்ரபந்தங்களை அருளி, ஆறாவதான திருநெடுந்தாண்டகம் என்னும் கடைசி ப்ரபந்தத்தில் அவனைப் பரிபூர்ணமாகப் பெற்றுத் தலைக்கட்டியபடியைப் பேசுகிறார். மடலூருவது ஒரே கார்யமாகில், அதற்கு இரண்டு ப்ரபந்தங்கள் எதற்கு எனில்: சிறிய திருமடலாகிய முதல் மடலிலே க்ருஷ்ணன் விஷயமாக மடலூர்ந்தார்; அவன் காலாந்தரத்திலிருந்தவனாய், தானும் மடலெடுக்கக்கூடிய சுணைகேடனாகையாலே பலிக்கவில்லை என்று கொண்டு, நீர்மையின் எல்லைநிலமாகத் தம் காலத்திலேயே விளங்கிய அர்ச்சாவதாரத்திலே பெரிய திருமடலில் மடலெடுக்கையாலே இரு ப்ரபந்தங்கள் மடலாக அமைந்தன.

இந்த ஆறு ப்ரபந்தங்களில் முதலிரண்டு ப்ரபந்தங்களான பெரிய திருமொழியும், திருக்குறுந்தாண்டகமும், சரமப்ரபந்தமான திருநெடுந்தாண்டகமும் தவிர மற்றவை பெரியவாச்சான் பிள்ளை அருளிய வ்யாக்யானங்களுடனும் எமது விவரணத்துடனும் ஏற்கனவே நம்மால் வெளியிடப்பட்டன. இப்போது சிறிய திருமடல் வ்யாக்யானம் மூன்றாம் பதிப்பாக வெளியிடப்படுகிறது. இதைத் தொடர்ந்து, ஏற்கனவே வெளியிடப்பெற்ற பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யானத்துடனும், நமது விவரணத்துடனும், அழகியமணவாளப் பெருமாள் நாயனார் அருளிய விரிவான வ்யாக்யானத்தையும் சேர்த்து பெரியதிருமடலும் இரண்டாவது பதிப்பு வெளியிடப்படும்.

*ராக்ஷஸ வருஷம்,*
*கார்த்திகையில்*
*கார்த்திகை*

தாஸன்,

**ஸ்ரீ. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்,**

ஸுதர்ஶனம் ஆசிரியர்.

ஸ்ரீ:

## திருமங்கையாழ்வார் அருளிச்செய்த

# சிறிய திருமடல்

பக்கம்

### தனியன்

1. முள்ளிச் செழுமலரோ(ர்) தாரான் முளைமதியம்
கொள்ளிக் கென்னுள்ளம் கொதியாமே—வள்ளல்
திருவாளன் சீர்க்கலியன் கார்க்கலியை வெட்டி
மருவாளன் தந்தான் மடல்.

---

16. காரார் வரைக்கொங்கைக் கண்ணார் கடலுடுக்கை
18. சீரார் சுடர்ச் சுட்டிச் செங்கலுழிப் பேராற்று (ப்) 1
20. பேரார மார்வில் பெருமா மழைக்கூந்தல்
நீரார வேலி நிலமங்கை யென்னும்இப் 2
22. பாரோர் சொலப்பட்ட மூன்றன்றே—அம்மூன்றும்
ஆராயில் தானே அறம்பொரு ளின்பமென்று— 3
24. ஆரா ரிவற்றி னிடையதனை யெய்துவார்
சீரா ரிருகலையு மெய்துவர்—சிக்கெனமற்று 4
26. ஆரானு முண்டென்பா ரென்பது தானதுவும்
ஓராமை யன்றே உலகத்தார் சொல்லுஞ்சொல் 5
ஓராமை யாமா றதுவுரைக்கேன் கேளாமே
காரார் புரவியேழ் பூண்ட தனியாழித் 6
28. தேரார் நிறைகதிரோன் மண்டலத்தைக் கீண்டுபுக்கு
ஆரா வமுதமங் கெய்தி அதில்நின்றும் 7
வாரா தொழிவதொன் றுண்டே; அதுநிற்க
30. ஏரார் முயல்விட்டுக் காக்கைப்பின் போவதே— 8
ஏரா ரிளமுலையீர் என்றனக் குற்றதுதான்
32. காரார் குழலெடுத்துக் கட்டிக் கதிர்முலையை 9
வாரார வீக்கி மணிமே கலைதிருத்தி
34. ஆரா ரயில்வேற்க ணஞ்சனத்தின் நீறணிந்து 10
சீரார் செழும்பந்து கொண்டடியா நின்றேன் நான்
36. நீரார்கமலம்போற் செங்கண்மா லென்றொருவன் 11
பாரோர்க ளெல்லாம் மகிழப் பறைகறங்கச்
38. சீரார் குடமிரண் டேந்திச் செழுந்தெருவே 12

ஆரா ரெனச்சொல்லி யாடு மதுகண்டு
ஏரா ரிளமுலையா ரென்னையரு மெல்லாரும் 13
40. வாராயோ வென்றார்க்குச் சென்றேனென் வல்வினையால்
காரார் மணிநிறமுங் கைவளையுங் காணேன்நான் 14
42. ஆரானுஞ் சொல்லிற்றுங் கொள்ளேன் அறிவழிந்து
தீரா வுடம்பொடு பேதுறுவேன் கண்டிரங்கி 15
44. ஏரார் கிளிக்கிளவி யெம்மனைதான் வந்தென்னைச்
சீரார் செழும்புழுதிக் காப்பிட்டுச் செங்குறிஞ்சித் 16
தாரார் நறுமாலைச் சாத்தற்குத் தான்பின்னும்
46. நேரா தனவொன்று நேர்ந்தா ளதனாலும் 17
தீராதென் சிந்தைநோய் தீராதென் பேதுறவு
வாராது மாமை அதுகண்டு மற்றாங்கே 18
ஆரானும் மூதறியு மம்மனைமார் சொல்லுவார்
48. பாரோர் சொலப்படுங் கட்டுப் படுத்திரேல் 19
ஆரானும் மெய்ப்படுவ னென்றார்—அதுகேட்டுக்
காரார் குழற்கொண்டைக் கட்டுவிச்சி கட்டேறிச் 20
50. சீரார் சுளகில் சிலநெல் பிடித்தெறியா
வேரா விதிர்விதிரா மெய்சிலிராக் கைமோவா— 21
52. பேரா யிரமுடையா னென்றாள்—பேர்த்தேயும்
54. காரார் திருமேனி காட்டினாள்—கையதுவும் 22
சீரார் வலம்புரியே யென்றாள்—திருத்துழாய்த்
56. தாரார் நறுமாலை கட்டுரைத்தாள் கட்டுரையா 23
நீரேது மஞ்சேன்மின் நும்மகளை நோய்செய்தான்
ஆரானு மல்ல னறிந்தே னவனைநான் 24
58. கூரார் வேற்கண்ணீ ருமக்கறியக் கூறுகேனே
ஆரா லிவ்வைய மடியளப் புண்டதுதான் 25
60. ஆரா லிலங்கை பொடிபொடியா வீழ்ந்ததுமற்று
ஆராலே கன்மாரி காத்ததுதா னாழிநீர் 26
62. ஆரால் கடைந்திடப் பட்ட தவன்காண்மின்
ஊரா நிறைமேய்த் துலகெல்லா முண்டுமிழ்ந்தும் 27
64. ஆராத தன்மையனா யாங்கொருநா ளாய்ப்பாடிச்
66. சீரார் கலையல்குல் சீரடிச் செந்துவர்வாய் 28
68. வாரார் வனமுலையாள் மத்தாரப் பற்றிக்கொண்டு
70. ஏரா ரிடைநோவ எத்தனையோர் போதுமாய்ச் 29

சீரார் தயிர்கடைந்து வெண்ணெய் திரண்டதனை
வேரார் நுதல்மடவாள் வேறோர் கலத்திட்டு 30
72. நாரா ருறியேற்றி நன்கமைய வைத்ததனைப்
போரார்வேற் கண்மடவாள் போந்தனையும்
பொய்யுறக்கம் 31
ஓரா தவன்போல் உறங்கி யறிவுற்றுத்
74. தாரார் தடந்தோள்க ளுள்ளளவும் கைநீட்டி 32
ஆராத வெண்ணெய் விழுங்கி அருகிருந்த
76. மோரார் குடமுருட்டி முன்கிடந்த தானத்தே 33
ஓரா தவன்போல் கிடந்தானைக் கண்டவளும்
78. வாராத்தான் வைத்தது காணாள் வயிறடித்திங்கு 34
ஆரார் புகுதுவா ரைய ரிவரல்லால்
நீரா மிதுசெய்தீ ரென்றோர் நெடுங்கயிற்றால் 35
80. ஊரார்க ளெல்லாருங் காண வுரலோடே
தீரா வெகுளியளாய்ச் சிக்கென ஆர்த்தடிப்ப 36
ஆரா வயிற்றினோ டாற்றாதான்—அன்றியும்
82. நீரார் நெடுங்கயத்தைச் சென்றலைக்க நின்றுரப்பி 37
84. ஓரா யிரம்பணவெங் கோவிய னாகத்தை
வாரா யெனக்கென்று மற்றதன் மத்தகத்துச் 38
சீரார் திருவடியால் பாய்ந்தான்—தன் சீதைக்கு
86. நேராவ னென்றோர் நிசாசரிதான் வந்தானைக் 39
88. கூரார்ந்த வாளால் கொடிமூக்குங் காதிரண்டும்
90. ஈரா விடுத்தவட்கு மூத்தோனை வெந்நரகம் 40
சேரா வகையே சிலைகுனித்தான்—செந்துவர்வாய்
94. வாரார் வனமுலையாள் வைதேவி காரணமா 41
ஏரார் தடந்தோ ளிராவணனை ஈரைந்து
சீரார் சிரமறுத்துச் செற்றுகந்த செங்கண்மால் 42
96. போரார் நெடுவேலோன் பொன்பெயரோ னாகத்தைக்
98. கூரார்ந்த வள்ளுகிரால் கீண்டு குடல்மாலை 43
சீரார் திருமார்பின் மேற்கட்டிச் செங்குருதி
100. சோராக் கிடந்தானைக் குங்குமத் தோள்கொட்டி 44
ஆரா வெழுந்தா னரியுருவாய்—அன்றியும்
பேர்வாம னாகிய காலத்து மூவடிமண் 45
102. தாரா யெனக்கென்று வேண்டிச் சலத்தினால்
நீரேற் றுலகெல்லாம் நின்றளந்தான் மாவலியை 46

ஆராத போரி லசுரர்களுந் தானுமாய்க்
104. காரார் வரைநட்டு நாகங் கயிறாகப் 47
பேராமல் தாங்கிக் கடைந்தான் திருத்துழாய்த்
தாரார்ந்த மார்வன் தடமால் வரைபோலும் 48
106. போரானை பொய்கைவாய்க் கோட்பட்டு நின்றலறி
நீரார் மலர்க்கமலங் கொண்டோர் நெடுங்கையால் 49
நாரா யணாஓ! மணிவண்ணா! நாகணையாய்!
வாராய் என்னாரிடரை நீக்கா யெனவெகுண்டு 50
108. தீராத சீற்றத்தாற் சென்றிரண்டு கூறாக
ஈரா வதனை யிடர்கடிந்தா னெம்பெருமான் 51
110. பேரா யிரமுடையான் பேய்ப்பெண்டீர் நும்மகளைத்
தீரா நோய்செய்தா னெனவுரைத்தாள்—சிக்கெனமற்று 52
112. ஆரானு மல்லாமை கேட்டெங்க ளம்மனையும்
போரார்வேற் கண்ணீ ரவனாகில் பூந்துழாய் 53
தாரா தொழியுமே தன்னடிச்சி யல்லளேமற்று
ஆரானு மல்லனே யென்றொழிந்தாள்—நானவனைக் 54
114. காரார் திருமேனி கண்டதுவே காரணமாப்
பேராப் பிதற்றாத் திரிதருவன் பின்னையும் 55
ஈராப் புகுதலு மிவ்வுடலைத் தண்வாடை
116. சோரா மறுக்கும் வகையறியேன் சூழ்குழலார் 56
ஆரானு மேசுவ ரென்னு மதன் பழியை
வாராமல் காப்பதற்கு வாளா விருந்தொழிந்தேன் 57
118. வாராய் மடநெஞ்சே வந்து மணிவண்ணன்
சீரார் திருத்துழாய் மாலை நமக்கருளித் 58
தாரான் தருமென் றிரண்டத்தி லொன்றதனை
120. ஆரானு மொன்றாதார் கேளாமே சொன்னக்கால் 59
ஆராயு மேலும் பணிகேட் டதன்றெனிலும்
போரா தொழியாதே போந்திடு நீ யென்றேற்குக் 60
122. காரார் கடல்வண்ணன் பின்போன நெஞ்சமும்
வாராதே யென்னை மறந்ததுதான் வல்வினையேன் 61
124. ஊரா ருகப்பதே யாயினேன் மற்றெனக்கிங்கு
ஆராய்வா ரில்லை அழல்வாய் மெழுகுபோல் 62
நீரா யுருகுமென் னாவி நெடுங்கண்கள்
126. ஊரா ருறங்கிலுந் தானுறங்கா வுத்தமன்றன் 63

பேரா யினவே பிதற்றுவன் பின்னையும்
காரார் கடல்போலுங் காமத்த ராயினர் 64
ஆரே பொல்லாமை யறிவார் அதுநிற்க
128. ஆரானு மாதானு மல்ல ளவள்காணீர் 65
வாரார் வனமுலை வாசவ தத்தையென்று
ஆரானுஞ் சொல்லப் படுவா ளவளுந்தன் 66
பேராய மெல்லா மொழியப் பெருந்தெருவே
130. தாரார் தடந்தோள் தளைக்காலன் பின்போனாள் 67
ஊரா ரிகழ்ந்திடப் பட்டாளே மற்றெனக்கிங்கு
ஆரானுங் கற்பிப்பார் நாயகரே நானவனைக் 68
132. காரார் திருமேனி காணு மளவும்போய்ச்
சீரார் திருவேங் கடமே திருக்கோவல் 69
134. ஊரே மதிட்கச்சி யூரகமே பேரகமே
பேரா மருதிறுத்தான் வெள்ளறையே வெஃகாவே 70
136. பேராலி தண்கால் நறையூர் திருப்புலியூர்
138. ஆரமஞ் சூழ்ந்த வரங்கங் கணமங்கை 71
140. காரார் மணிநிறக் கண்ணனூர் விண்ணகரம்
சீரார் கணபுரஞ் சேறை திருவழுந்தூர் 72
காரார் குடந்தை கடிகை கடல்மல்லை
142. ஏரார் பொழில்சூ ழிடவெந்தை நீர்மலை 73
சீராரும் மாலிருஞ் சோலை திருமோகூர்
144. பாரோர் புகழும் வதரி வடமதுரை 74
ஊராய வெல்லா மொழியாமே நானவனை
146. ஓரானை கொம்பொசித் தோரானை கோள்விடுத்த 75
சீரானைச் செங்க ணெடியானைத் தேன்துழாய்த்
தாரானைத் தாமரைபோற் கண்ணனை யெண்ணருஞ்சீர்ப் 76
பேரா யிரமும் பிதற்றிப் பெருந்தெருவே
148. ஊரா ரிகழிலு மூரா தொழியேன்நான் 77
வாரார்பூம் பெண்ணை மடல்.

## கம்பர் பாடல்

149. ஊரா தொழியே னுலகறிய வொண்ணுதலீர்
சீரார் முலைத்தடங்கள் சேரளவும்—பாரெல்லாம்
அன்றோங்கி நின்றளந்தான் நின்ற திருநறையூர்
மன்றோங்க வூர்வன் மடல்.

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



# பிள்ளை திருநறையூரரையர் அருளிச்செய்த
# சிறியதிருமடல் தனியன்

முள்ளிச் செழுமலரோ(ர்) தாரான் முளைமதியம்
கொள்ளிக் கென்னுள்ளம் கொதியாமே—வள்ளல்
திருவாளன் சீர்க்கலியன் கார்க்கலியை வெட்டி
மருவாளன் தந்தான் மடல்.

---

# பிள்ளைலோகம் ஜீயர் அருளிச்செய்த
# தனியன் வ்யாக்யானம்

## அவதாரிகை

(முள்ளிச்செழுமலரோர்) "ஶப்₃தா₃தி₃ விஷயங்களின் ஸந்நிதி₄யிலே மநஸ்ஸு பரிதபியாமல், ப₄க₃வத் ப்ராவண்யத்துக்கு அநுகூ₃ணமாகத் "திருமடல்" என்கிற தி₃வ்யப்ரப₃ந்த₄த்தை உபகரித்தருளுவதே" என்று ஆழ்வார் திருவடிகளில் ப்ரேமமுடையாருடைய ஈடுபாடாயிருக்கிறது. அன்றிக்கே, ஸ்வவிஶ்லேஷத்தில் ஸாம்ஸாரிக

---

# திவ்யப்ரபந்தஸாரம்

## சிறியதிருமடல் தனியன் வ்யாக்யானம்

**அவதாரிகை:**—"ஶப்₃த₃ஸ்பர்ஶரூபரஸக₃ந்த₄ங்கள் என்னும் ஐந்து விஷயங்களின் முன்னிலையில் மனமானது கொதிப்பு அடையாமல், ப₄க₃வானிடம் ஈடுபடுவதற்குத் தகுந்ததாக "திருமடல்" என்னும் தி₃வ்யப்ரப₃ந்த₄த்தை உபகரித்தருளுவதே!" என்று ஆழ்வார் திருவடிகளில் அன்புடையாருடைய ஈடுபாட்டை வெளியிடுவதாயிருக்கிறது இப்பாட்டு. இந்த நிர்வாஹத்தில், ப₄க₃வத்₃ப₄க்தர்களுக்கு ப₄க₃வத்₃ விஶ்லேஷத்தில் உயிர் த₄ரிக்கைக்கு உபகரணமாயிருக்கிறது இப்பிரப₃ந்த₄ம் என்று தாத்பர்யம். அன்றிக்கே, ஆழ்வாரிடத்திலே ஈடு

**பதவுரை:** — **செழும்**—செழிப்புள்ள, **ஓர்** — ஒப்பற்ற. **முள்ளி மலர் தாரான்**–முள்ளிப்பூக்களாலே கட்டப்பட்ட மாலையை உடையவராய், **வள்ளல்**—கொடையாளியாய், **திருவாளன்**—(பகவத் கைங்கர்யமாகிற) செல்வத்தை உடையரரய், **மருவாளன்**—(கையில்) பொருந்திய வாளை உடையராய், **சீர் கலியன்**—கல்யாண குணங்களுடைய கலிகன்றியானவர், **முளை மதி அம் கொள்ளிக்கு**—உதிக்கிற சந்திரனாகிற அழகிய நெருப்புககு, **என் உள்ளம்**—என்னு டைய நெஞ்சு, **கொதியாமே**—பரிதபிக்காதபடி, **கார் கலியை**–கறுத்த கலிதோஷத்தை, **வெட்டி**—போக்கி, **மடல் தந்தான்**—"சிறிய திருமடல்" என்னும் திவ்யப்ரபந்தத்தைத் தந்தருளினர்.

---

விஷயங்களிலே மாநஸ்ஸு பரிதபியாதபடி ஸ்வப்ரஸா தத்தை ப்ரஸாதியாமல் தாம் மடலெடுக்க உபக்ரமித்த பாசுரமான மடலையே தந்துவிட்டாரென்றுகவுமாம்.

**வ்யா:**— (முள்ளிச்செழுமலரோர் தாரான்) தமக்கு அஸாதாரணமாய், அத்விதீயமாயிருக்கிற முள்ளிப்பூவைத் தாராகவுடையவரென்னுதல்; "வகுளத்தாரான்" என்னுமா போலே. அன்றிக்கே, "மலரோ" என்று பாடமான

---

**பட்டவர்கள், அவரைப்பிரிந்து இதரவிஷயங்களில் உழன்று நோவுபடா மலிருக்க, தான் சூடிக்களைந்த முள்ளிச்செழுமலர் மடலைத் தாராமல், தாம் எம்பெருமான் விஷயமாக மடலெடுக்க ஆரம்பித்த ப்ரபந்த மான "*சிறிய திருமடல்*" என்னும் மடலையே தந்துவிட்டார் என்றும் நிர்வஹிக்கலரம்.**

**வ்யா:—(முள்ளிச்செழு மலரோர் தாரான்) திருமங்கை மன்ன னாகிற தமக்கென ஏற்பட்டதாய், ஒப்பற்றதாயிருக்கும் முள்ளிமலர் மாலையை உடையவர். "வகுளத்தாரானை" [திருவாசிரியத் தனி யன்] என்று நம்மாழ்வாரைச் சொல்லுவதுபோல். (ஓர் தாரான்) ஒப்பற்ற மாலையை உடையவர். தன்னைப் பிரியவிட்டு நோவுபடுத் தும் எம்பெருமானுடைய துளவமாலையும், விஶ்லேஷத்தில் தாரகமான ஆழ்வார்மாலைக்கு ஒப்பாகாது என்று கருத்து. இது அவதாரிகை யில் முதல் நிர்வாஹத்துக்குப் பொருந்தும். இரண்டாவது நிர்வா**

போது, நம் அபேக்ஷிதமான முள்ளிச் செழுமலர் மாலை யையோ தருகிறிலர் என்ருகவுமாம். மலரென்றது - மாலைக்கு உபலக்ஷணம். எதுக்காகத் தார் தரவேணுமென்னில்; (முளை மதியம் கொள்ளிக்கென்னுள்ளம் கொதியாமே) முளைத்தெழுந்த திங்கள் விரஹிகளாயிருப்பார்க்குத் தாப ஹேதுவிறே. "போந்த வெண்டிங்கள் கதிர் சுட மெலியும்" என்ருரிறே இவரும். நாட்டார்க்கும் அப்படியே, "**चन्द्रश्चण्डकरायते**" (சந்த்$_3$ரஶ்சண்ட$_3$ கராயதே) என்று சந்த்$_3$ர மண்ட$_3$லம் சண்ட$_3$மண்ட$_3$லமாயிருக்கை. "**तान्येवारमणीयानि**" (**தாந்யேவாரமணீயாநி**) முளைமதி அங்கொள்ளி என்னுதல், முளைமதியமாகிற கொள்ளியென்னுதல். அங்கொள்ளி -

---

**ஹத்துக்குச் சேர 'முள்ளிச் செழுமலரோ தாரான்'' என்னும் பாட$_3$மு முண்டு. (முள்ளிச் செழுமலரோ தாரான்) ஆழ்வார்க்கு அடியா ரான நமக்கு இனியதான முள்ளிமலர்மாலை ஆழ்வார் நமக்குத் தருகின்றிலர். தம்மை நமக்கு அடியோமாக அறுதியிட்டிருக்கையாலே. அதற்குப் பிரதியாக சிறியதிருமடல் பிரபந்தமாகிற மடலையே தந்து விட்டார் என்கிருர்.**

**மடல்தரவேண்டியது எதற்காகவெனில்:—(முளைமதியம் கொள்ளிக்கென்னுள்ளங் கொதியாமே) முளைத்தெழுந்த சந்திரன் அன்புடையரைப் பிரிந்தவர்களுக்குத் தாபத்தை அளிக்குமன்றே. ஆகையால் முளைமதியமாகிற கொள்ளிக்கட்டை என்கிருர், இவ்வாழ்வாரும் ''போந்த வெண் திங்கள் கதிர் சுட மெலியும்'' [பெரிய திரு 2-7-3] என்று விரஹதசையில் எரிக்கும் சந்திரனை சூரியனுகவே அருளிச் செய்தாரன்றே. மற்றுள்ள உலகினர்க்கும், ''சந்த்$_3$ரஶ் சண்ட$_3$ கராயதே'' [சந்திரன் எரிக்கும் கிரணங்களையுடைய சூரியனுகிருன்] என்கிறபடியே சந்திரமண்டலம் சண்ட$_3$ (சூரிய) மண்ட$_3$லமாயிருக்கும்.**

''யாநி ஸ்ம ரமணீயாநி தயா ஸஹ ப$_4$வந்தி மே।
 தாந்யேவாரமணீயாநி ஜாயந்தே மே தயா விநா ॥'' [ரா-கி 1-70]

[பிராட்டியோடிருக்கும்போது அழகியவையாயிருந்தவையே அவளைப் பிரிந்தபோது அழகற்றவையாகின்றன] என்ருரன்றே ராமபிரானும். (முளைமதியங் கொள்ளி) முளைமதியம் கொள்ளி - முளைமதியமாகிற கொள்ளி என்றும் கொள்ளலாம்; முளை மதியாகிற — அம் — அழகிய

அழகிய கொள்ளியெனனுதல். இது பஞ்ச விஷயத்துக்கு உபலக்ஷணம். "மல்லிகை கமழ்தென்றலீருமாலோ வண் குறிஞ்சி இசை தவருமாலோ" என்றும், "வாடை தண் வாடை வெவ்வாடையாலோ, மேவுதண் மதியம் வெம்மதியமாலோ, மென்மலர்ப்பள்ளி வெம்பள்ளியாலோ" என்றுமிறே விஶ்லேஷத்தில் விஷயங்களின் பாதகத்வாகாரங்களிருப்பது. அதுதான் விஷயாநுகுணமாயிறே இருப்பது. ஆகையால், குளிர்ந்த சந்த்ரனைக்கொள்ளிபோலே கண்டு என் ஹ்ருதயம் பரிதபியாதே, ஆழ்வார் பண்ணின உபகாரமே! (வள்ளல் திருவாளன் சீர்க்கலியன்) வள்ளல்—

---

**கொள்ளியென்றும் கொள்ளலாம். இங்கு "மதியம்" என்று சந்திரனைச் சொன்னது, விரஹத்தில் பாதிப்பவையான சந்திரன், மல்லிகை, குறிஞ்சிப்பண், வாடைக்காற்று, மலர்ப்பள்ளி என்னும் ஐந்து விஷயங்களுக்கு எடுத்துக்காட்டு. "மல்லிகை கமழ்தென்றலீருமாலோ வண்குறிஞ்சி இசைதவருமாலோ" [திருவாய் 6–9–1] என்றும், "வாடை தண்வாடை வெவ்வாடையாலோ மேவுதண் மதியம் வெம்மதியமாலோ மென்மலர்ப்பள்ளி வெம்பள்ளியாலோ" [திருவாய் 6–9–4] என்றுமன்றோ நம்மாழ்வார் பிரிந்தாரை பாதிக்கும் விஷயங்களைக் காட்டினார். ஶப்தாதி விஷயங்கள் ஐந்தாயிருப்பதுபோல இவையும் ஐந்தாயிருக்கும்படி. "முனைமதியங்கொள்ளிக்கு என்னுள்ளம் கொதியாமே முள்ளிச்செழுமலரோ தாரான்" என்று இரண்டாம் நிர்வாஹத்தில் முன்னேயும், "முனைமதியம் கொள்ளிக்கு என்னுள்ளம் கொதியாமே தந்தான் மடல்" என்று இரண்டு நிர்வாஹத்திலும் பின்னேயும் கூட்டிப் பொருள் கொள்ளவேணும்.**

**(முனைமதியம் கொள்ளிக்கென்னுள்ளம் கொதியாமே தந்தான் மடல்) குளிர்ந்த சந்திரனைக் கொள்ளிபோலே கண்டு என் மனம் பரிதபிக்காதபடி ஆழ்வார் பண்ணின உபகாரமிருந்தபடியென்! இவ்வுபகாரம் செய்தவர்தான் யாரென்னில்: (வள்ளல் திருவாளன்) வள்ளல் — சிறந்த கொடையாளி; பகவானும் உதவாத தசையில் உதவினவராகையாலே. திருவாளன் — பகவத் கைங்கர்யமாகிற செல்வமுடையவர். (வள்ளல் திருவாளன்) வள்ளலென்றால், வாரி வழங்குவதற்குச் செல்வம் வேணுமே; அச்செல்வத்தையும் உடையவர்**

பரமோதா3ரர்; திருவாளன் - ப4க3வத் ப்ரத்யாஸத்தியாகிற ஐஶ்வர்யத்தையுடையவர். (வள்ளல் திருவாளன்) இவர் ஔதா3ர்யம் பண்ணுகைக்கு உடலான ஐஶ்வர்யம். (சீர்க் கலியன்) ப4க3வத்3 ப4க்த்யாதி3 கு3ணங்களையுடையவர். (கார்க்கலியை வெட்டி) கலிகன்றியாகையாலே அஜ்ஞாநா வஹமான கலியைக் கடிந்து. கலிதோ3ஷமிறே காம பரவஶராகிறது. அப்படி அப்ராப்த விஷயத்தில் காமம் வாராதபடி. (மருவாளன் தந்தான் மடல்) திருக்கையிலே மருவியிருக்கிற வாளையுடையவர், ப4க3வத் காமத்துக்கு அநு கு3ணமான திருமடலென்கிற தி3வ்ய ப்ரப3ந்த4த்தை உப கரித்தருளினர். (மருவாளன்) ப4க3வத3நுப4வத்திலுண்டான போ4க்3யதை வடிவில் தொடைகொள்ளலாம்படியானவர். "இவள் அந்தண்டுழாய் கமழ்தல்". மரு - பரிமளம். மருவு- மருவுதலாய், எம்பெருமானைக் கிட்டுகையை ஸ்வபா4வ மாக உடையவரென்றுமாம். அன்றிக்கே, சேதநரைக்

---

என்கிறார். செல்வம் இருந்தாலும் அதை வாரி வழங்கத்தகுந்த தா3யாளகு3ணம் வேணுமே வள்ளலாகைக்கு; அதுவும் உண்டென் கிறார்,—(சீர்க்கலியன்) தா3யாதி3கு3ணங்களை உடையவரான கலிகன்றி. மடல் தருவதாகில், முட்களை வெட்டி மடலைப்பறிக்கவேணுமே என் னில்,—(கார்க்கலியை வெட்டி) கறுத்ததான கலியாகிற முள்ளை வெட்டித்தந்தார் என்கை. கறுத்ததாகையாவது,—அஞ்ஞான இருளைத் தருவதாயிருக்கை. அஞ்ஞானமளிக்கும் கலியை வெட்டி னார் கலிகன்றியாகையாலே என்று கருத்து. முள்ளை வெட்ட வாள் வேணுமே; அது இவரிடமுண்டோ? என்னில்,—(மருவாளன்) மருவிய வாளை உடையவர். கையிலே பொருந்தியிருக்கும் வாளை உடையவர். "வாள்" என்றது ஸ்வாபதே3ஶத்தில் ஞானத்தைக் குறிக்கும். மெய்ஞ்ஞானக்கத்தியாலே அஞ்ஞானவிருளை வெட்டினார் என்று தாத்பர்யம். (மருவாளன்) 'மரு' என்று பரிமளத்தைச் சொல்லுமாகையாலே, ப4க3வத3நுப4வமாகிற நறுமணம் வடிவிலே முகரலாம்படியிருப்பவர். "இவளந்தண்துழாய்கமழ்தல்" [திருவாய் 8-9-10] என்ற திருவாய்மொழி காண்க. (மருவாளன்) மருவுதல் கிட்டுதலாகையாலே பரமபுருஷனைக் கிட்டுவதையே ஸ்வபா4வமாக உடையவர் என்றும் பொருள் கொள்ளலாம். அன்றிக்கே, சேத னரை மருவி—தானே மேல் விழுந்து அணுகி—ஆள்கிறவர் என்று

கிட்டி ஆளுகிறவ ரென்றுமாம். ஆகையால் சேதநரைத் தம்படியாக்கவேண்டி மடலை உபகரித்தருளினர். மாலையைத் தாராதே மடலைத்தந்து விட்டார் என்ருகவுமாம்.

சிறிய திருமடல் தனியன் வ்யாக்யானம் முற்றிற்று

பிள்ளைலோகம் ஜீயர் திருவடிகளே சரணம்

---

மாம். ஆகையால் சேதனரை முன்னிச்செழுமலர்த் தாருடைய தம்மைப்போல் ஆக்குவதற்காக மடலை அருளினர். இரண்டாவது நிர்வாஹத்தில், "மாலையைத் தாராமல் மடலைத் தந்துவிட்டார்" என்பதாகவும் சொன்னலாம், இதன் கருத்து பின்வருமாறு:— ஆழ்வார்க்கு அடியாராகையாலே இவர்கள் ஆழ்வார் சூடிக்களைந்த முன்னிச்செழுமலர்மாலையை அபேக்ஷிக்கிருர்கள். "அன்னையும் அத்தனும் என்று அடியோமுக்கு இரங்கிற்றிலன்" [பெரியதிரு 3—7—7] என்னும் இவ்வாழ்வார் இவர்களுக்கு அடியாளுகத் தன்னை அறுதியிட்டிருக்கையாலே, சூடிக்களைந்த முன்னிச்செழுமலர் தாராமல் மடல் பிரபந்தத்தைத் தந்துவிட்டார் என்று கருத்து.

திவ்யப்ரபந்தஸாரம் தனியன் வ்யாக்யானம் முற்றிற்று.



ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்த

# சிறியதிருமடல் வ்யாக்யானம்



ப்ரவேசம்

கீழ் அநுபவித்தது ஜ்ஞாநாநுபவமாகையாலே பாஹ்யஸம்ஶ்லேஷாபேக்ஷை பிறந்து, அது கிடையாமையாலே திருக்குடந்தையிலே ஶரணம்புக்கார் திருவெழு கூற்றிருக்கையிலே; இப்படி ஶரணம் புக்கவளவிலும் நினைவு பூரியாமையாலே, இதுக்கு ஹேதுவென் என்னில்; எம்பெருமான் தான் அஜ்ஞன் அஶக்தன் அப்ராப்தனாய்த் தாழ்க்கிறதன்று; இத்தலையில் கர்த்தவ்யஶேஷமுண்டாய்த் தாழ்க்கிறதன்று. இனி விலம்பஹேது இரண்டு

---

## திவ்யப்ரபந்தஸாரம்
## சிறியதிருமடல் வ்யாக்யானம்

ப்ரவேசம்

திருக்குறுந்தாண்டகத்திலே "என் மனத்து வந்த விதியினைக் கண்டுகொண்ட தொண்டனேன் விடுகிலேனே" [1] முதலான இடங்களிலே மானஸமான ஜ்ஞாநத்தினால் பரமபுருஷனைக் கண்டு அநுபவித்தார். வெளியிந்திரியங்களாலே அவனைக்கண்டு கட்டித் தழுவிக்கொண்டு பரிமாறவேண்டும் என்று ஆசைகொண்டு, அது கிடைக்காமையாலே அது கிடைக்கைக்காகத் திருவெழுகூற்றிருக்கையிலே, "செல்வம் மல்குதென் திருக்குடந்தை. அந்தணர் மந்திர மொழியுடன் வணங்க, ஆடரவமளியில் அறிதுயிலமர்ந்த பரம நின்னடியிணை பணிவன்" என்று ஶரணம் புகுந்தபோதும் வெளியிந்திரியங்களால் அனுபவிக்கவேணும் என்னும் எண்ணம் ஈடேறாமையாலே, இதற்குக் காரணமென்ன? என்று ஆராய்ந்தார். ஸர்வேஶ்வரனான பரமபுருஷன் இவர் நிலையை அறியாதவனாகவோ, இவர் இருக்குமிடம் வர ஶக்தியில்லாதவனாகவோ, இவருக்குத் தகாதவனாகவோ இருக்கையால் காலம் தாழ்த்துகிறானல்லன்; ஶரணம் புகுந்த இவர்

தலைக்குமின்றிக்கேயிருக்கச்செய்தே, இனித்தாழ்க்கிறது கூடல் செய்ய நினையாமையாலே; ஆனபின்பு "இத் தலையை அழித்தாகிலும், முகங்காட்டுவித்துக்கொள்ளு வோம்" என்கிற த்வரையின் மிகுதியை, க்ருஷ்ணாவதா ரத்தில் குடக்கூத்திலே அகப்பட்டு, அவனைக் கிடையாமை யாலே மடலெடுக்கத் துணிந்தாளொரு பிராட்டியுடைய பாசுரத்தாலே ஸ்வதஶையை ஆவிஷ்கரிக்கிருர்.

மடலாவது "**तुल्यशीलवयोवृत्तां तुल्याभिजनलक्षणां**" (**துல்ய ஶீலவயோவ்ருத்தாம் துல்யாபிஜந லக்ஷணாம்**) என் கிறபடியே இருவரும் ஒத்த பருவத்தராய், பும்ஸ்த்வத் துக்கு ஏகாந்தமான அறிவு, நிறைவு, ஓர்ப்பு. கடைப்பிடி என்கிற குணங்களாலே அவனும் பூர்ணனாய், ஸ்த்ரீத் வத்துக்கு ஏகாந்தமான நாண், மடம், அச்சம், பயிர்ப்பு

---

இனிச் செய்யவேண்டியதொன்றில்லாமையாலே அத்தாலும் தாமத மில்லை. தாமதத்திற்குக் காரணம் இருவரிடமும் இல்லாமலிருக்க, தாமதம் செய்வது இவரோடு கூடுவதென்று அவன் நினைக்காமை யாலேயே. ஆகையால் "தன் ஸ்வரூபமாகிற பாரதந்திரியத்தை அழித்துக்கொண்டாவது அவனை வரவழைத்துக்கொள்வோம்" என் கிற வேகமும் பிறந்து அவ்வேகத்தின் மிகுதியை, கண்ணனுயவ தரித்தபோது குடங்களையெடுத்து ஆடின கூத்திலே ஈடுபட்டு. அவனை அணைய முடியாமையாலே மடலெடுக்கத் துணிந்த ஒரு பிராட்டியுடைய பாசுரத்தாலே தன் நிலையை வெளிக்காட்டுகிருர் இப்பிரபந்தத்தில்.

'மடல்' என்பது யாதெனில்: "துல்யஶீலவயோவ்ருத்தாம் துல்யாபிஜநலக்ஷணாம் । ராகவோऽர்ஹதி வைதேஹீம் தம் சேய மஸிதேக்ஷணா ॥" [ரா-ஸு 16—5] [ஒத்த குணம், வயது, ஒழுக்கம் ஆகியவற்றை உடையவளும், ஒத்த குலம், அழகு ஆகிய வற்றையுடையவளுமான சீதைக்கு ராமபிரானே தகுந்தவர். இவ ருக்கும் கறுத்த கண்களையுடைய அவளே தகுந்தவள்.] என்கிற படியே நாயகநாயகிகள் இருவரும் ஒத்த பருவத்தினராய், (ஆண் மைக்குரிய) அறிவு, மதிப்பு, ஆராய்ச்சி, உறுதி ஆகிய குணங்க ளாலே நாயகனும் நிறைந்தவனாய், (பெண்மைக்குரிய) நாணம் (லஜ்ஜை), மடம் (பவ்யதை), அச்சம் (பயம்), பயிர்ப்பு (பிரிவில் பேனி வெறுப்பது) என்னும் குணங்களாலே நாயகியும் நிறைந்த

என்கிற குணங்களாலே இவளும் பூர்ணையாய், இப்படி இருவரும் குறைவற்றவர்களாயிருக்க, தோழிமாரும் தானுமாக உத்யாநத்திலே பூக்கொய்யவென்று புறப்பட, அவனும் வேட்டைக்கென்று புறப்பட்டுச் சோலையிலே புகுர, தைவயோகத்தாலே கூடினதாகையாலே உயிர்த் தோழியுங்கூட அந்யபரையானவளவிலே, யாத்ருச்சிகமாக இருவருக்கும் த்ருஷ்டி பந்தம் பிறந்து, அதுவே அடியாக ஸம்ஶ்லேஷம் ப்ரவ்ருத்தமாக, "உந்மஸ்தகரஸமாகக் கலந்த கலவியாகையாலே, நற்கேட்டிலே இரண்டு தலைக்கும் அழிவுவரும்" என்று இத்தை முடிய நடத்தக் கடவதாகப் பார்தத தைவந்தானே பிரிக்க, இருவருடைய பந்துக்களும் "புனையிழைகளணிவுமாடையுடையும் புதுக் கணிப்பும் நினையும் நீர்மையதன்று" என்னும்படி இருவர் வடிவிலேயும் வேறுபாடுகண்டு இருவரையும் காவல் செய்ய, அதுவே அடியாக இவர்களாற்றுமை ஸதஸாத

---

வளாய், இப்படி இருவரும் நிறைந்தவர்களாயிருக்கும்போது, நாயகியானவள் தோழிகளும் தானுமாய்த் தோட்டத்தில் பூப்பறிப்பதற்காகப் புறப்பட, நாயகனும் வேட்டைக்கென்று புறப்பட்டு இச்சோலைக்குள் புக, இச்சேர்த்தியானது விதிவஶத்தாலே கூடியதாகையாலே உயிர்த் தோழியும் விதிவஶத்தால் வேறு காரியத்தில் ஈடுபட்டிருக்கும்போது, நாயக நாயகிகள் இருவரும் கண்ணோடு கண் நோக்கிக்கொள்ள, அதுவே காரணமாகக் கலவி ஏற்பட, "இன்பம் தலைமண்டையிடும் படியாக ஏற்பட்ட கலவியாகையாலே, இது இடைவிடாமலே நடந்ததாகில், வெள்ளக்கேட்டால் பயிர்கள் அழிவதுபோலே, நாயக நாயகியர் இருவரும் இன்பமிகுதியைத் தாங்கமுடியாமல் அழிவர்; ஆகையால் பொறுக்கப்பொறுக்க அநுபவிக்கச்செய்ய வேணும்" என்று இவர்களுடைய சேர்த்தியை முடிவுவரையில் இடையூறில்லாமல் தலைக் கட்ட நினைத்த தெய்வமே இவர்களைப் பிரிக்க, நாயகநாயகிகள் இருவருடைய உறவினர்களும் "புனையிழைகளணிவும் ஆடையுடையும் புதுக்கணிப்பும் நினையும் நீர்மையதன்று" [திருவாய் 9—8—5] என்கிறபடியே இருவர் வடிவிலும் வேறுபாடு கண்டு, இருவரையும் காவலில் வைக்க, அதுவே காரணமாக இவர்கள் பிரிவாற்றுமை

மாகப் பனைக்கு எதிர்த்தலையைக் கிடையாமையாலே மற்றைத்தலை செய்யும் ஸாஹஸ ப்ரவ்ருத்தியாயிற்று மடலாவது.

இவர்கள் மடலெடுக்கிறதுக்கு ப்ரயோஜநம் என்னென்னில்: இவ்வுபக்ரமத்தைக்கண்டு இருவருடைய பந்துக்களும் கூட்டுதல்; அன்றியே, ராஜாக்கள் கூட்டுதல்; அன்றியே, இருவர் பந்துக்களும் இருவரையுங் கைவிட, / அலக்குப்போர்போலே ஒருவர்க்கொருவர் தஞ்சமாய்க்

---

நூறாயிரம் மடங்கு அதிகரிக்க, எதிர்த்தலையைக் கிட்டக்கப்பெறாமையாலே நாயகனோ நாயகியோ செய்யும் ஸாஹஸச் செயல் மடலாகும்.

ஸாஹஸச்செயலாவது என்னென்னில்: எதிர்த்தலையின் ஸ்வரூப ரூப குண விபூதிகளை அழிக்க முற்படுவது. அதாவது,—நாயகனை ஒரு படத்திலே எழுதி, வைத்த கண் வாங்காமல் அதனைப் பார்த்துக்கொண்டு, நெய்யுண்ணாமல், பாலுண்ணாமல், நீராடி, மையிட்டெழுதாமல், குதிரையுருவிலேயான பனைமடலைப் பற்றிக்கொண்டு, அப் பனைமடற் குதிரையிலே உலகெல்லாம் ஊர்ந்து செல்வதாக பாவித்துக்கொண்டு, தலைவிரிகோலமாய், "இன்னான்—(பெண்ணாயிருந்தால் இன்னாள்)—என்னைக் கைவிட்டனன். அவன் அருளற்றவன்; அவன் கடியன்; கொடியன். அவன் செய்த தீச்செயல்களுக்கோர் எல்லையில்லை" என்றெல்லாம் தெருத்தெருவாகக் கதறிக்கொண்டு, கேட்டாரெல்லாரும் நடுங்கி இரங்கும்படியாகத் திரிந்து உழல்வதுதான் மடலூருகையாவது. எதிர்த்தலைக்குள்ள ஸ்வரூப ரூபகுணவிபூதிகளை இல்லைசெய்வது அவற்றை அழிப்பதேயாகுமன்றோ.

இந்த நாயகநாயகியர் இக்கொடுஞ்செயலாகிய மடலெடுப்பதைச் செய்வதற்குப் பயனென்ன? எனில்; இவர்கள் மடலெடுக்கத் தொடங்குவதைக்கண்டு நாயகநாயகியர் இருவருடைய பந்துக்களும் இவ்விருவரையும் சேரவைக்கக்கூடும். அல்லது மடலெடுப்பதைக் கேள்வியுற்ற அத்தேசத்து அரசன் சேரவிடக்கூடும். அன்றிக்கே இருவர் உறவினர்களும் இருவரையும் கைவிட, / ஆயுதக்குவியல்

---

/ அலக்குப்போராவது:— வீரர்கள் கத்தி, ஈட்டி முதலான தங்கள் ஆயுதங்களை ஒன்றுக்கொன்று தூரமாக நிறுத்திவைப்பதாலேற்படும் ஆயுதக்குவியல்.

கூடிப்போதல் ; அன்றிக்கே, "மடலெடுத்து எதிர்த் தலையைப் பெருமையாலே இத்தலை முடிந்தது" என்னும் ஏற்றத்தைப் பெற்றுப்போதல்; இவை ப்ரயோஜநமாக.

* வளவேழுலகில் தங்கள் அயோக்₂யதையை அநுஸந்தி₄த்து அகலும் ஸ்வபா₄வரான இவர்கள் இஸ்ஸாஹஸ ப்ரவ்ருத்தியில் இறங்குவானென்னென்னில்; மடலெடுத்து அத்தலையை அழிக்கப் புகுகிறார்களல்லர்களே; "ஊர்வன் மடல்" என்று—"चापमानय सौमित्रे" (சாபமாநய ஸௌமித்ரே)

---

பேரலே ஒருவருக்கொருவர் து₃ரரகரராய்க் கூடிப்போகலாம். இவை யொன்றுமில்லாவிடிலும், "மடலெடுத்தபின்பும் காதலனை—(அல்லது காதலியை) — பெறமுடியாமையால் நாயகி — (அல்லது நாயகன்) முடியநேரிட்டது" என்னும் பெருமையே பிரயோஜனமாகும்.

"வளவேழுலகில்" [திருவாய் 1–5] என்னும் திருவாய்மொழியில் நம்மாழ்வாரைப்போலே தங்கள் தாழ்மையை நினைத்து, 'மிகவுயர்ந்த பொருளான எம்பெருமானை நாம் அணுகினால் அவனுக்குத் தாழ்வாகும்' என்னும் எண்ணத்தாலே அவனை விட்டு அகலும் இயற்கையை உடைய இவ்வாழ்வார்கள் இக்கொடுஞ்செயலிலே ஈடுபடலாமோ? எனில்: கடைசி வரையில் மடலெடுத்து எம்பெருமானுடைய ஸ்வரூபாதி₃களை அழிக்கப்போகிறவர்களல்லரே இவர்கள். "மாசறு சோதி" [திருவாய் 5—3] என்னும் திருவாய்மொழியிலே

"ஆணையென் தோழி உலகுதோறு அலர்தூற்றி, ஆம்
கோணைகள் செய்து குதிரியாய் மடலூர்துமே" என்றும்,

"யாம் மடலூர்ந்தும் எம் ஆழியங்கைப்பிரானுடை,
தூமடல் தண்ணந்துழாய் மலர்கொண்டு சூடுவோம்" என்றும்

மடலூர்வதாக நம்மாழ்வார் ப₄யமுறுத்தியதுபோலே இவரும் "ஊரா தொழியேன் நான் வாரார்பூம் பெண்ணைமடல்" என்றும் "உலகறிய ஊர்வன் நான் மன்னிய பூம்பெண்ணை மடல்" என்றும் ப₄யமுறுத்தி அவனை வரவழைக்க நினைத்தாரேயொழிய மடலூர்ந்து முடிக்கவில்லையே.

"சாபமாநய ஸௌமித்ரே! ஶராம்ஶ்சாஶீவிஷோபமாந் ।
ஸாக₃ரம் ஶோஷயிஷ்யாமி" [ரா-யு 21-22]

என்று வில்லைக்காட்டி வேலையை அச்சமுறுத்தினாற் போலே, அச்சமுறுத்தி முகங்காட்டுவித்துக்கொள்ளுகிற வர்களாகையாலே, தங்கள் துணிவைச் சொல்லவே அவன் வருமென்று சொல்லுகிறார்களத்தனையல்லது மடலெடுக்கிறார்களன்றிறே. அயோக்₃யரென்று அகன்ற தும், விலக்ஷண வஸ்துவென்று அநுஸந்தி₄த்திறே; கு₃ணாதி₄க்யமும் வைலக்ஷண்யமும் அநுஸந்தி₄த்தபடியாலே யிறே இவர்கள் ஆற்றமாட்டாதே வழியல்லாவழி போயா கிலும் பெறவேணும் என்று மேல்விழுகிறது.

இவர்களுக்குமொரு ஸ்வபா₄வமுண்டு;—தங்களை அநு ஸந்தி₄த்தபோது அயோக்₃யரென்று அகலுவர்கள். அவனை அநுஸந்தி₄த்தபோது தங்களையும் பாராதே மேல்விழு வர்கள்; அத்தலையை அநுஸந்தி₄க்கச்செய்தே இத்தலை தோன்றாதிறே; அத்தாலே மேல்விழுகிறார்கள்.

---

[லக்ஷ்மணா! வில்லையும் ஆஶீவிஷத்தையொத்த அம்புகளையும் எடுத்துவா. கடலை வற்றச்செய்கிறேன்] என்று ஸ்ரீ ராமபிரான் அம்பைக்காட்டி ஆழ்கடலை அச்சமுறச்செய்த செயல்போன்றது இது வும். அவனைப் பெறவேணுமென்பதில் தங்களுக்குள்ள உறுதியை உணர்த்தினால், அவன் தானாகவே ஓடிவருவான் என நினைத்துச் சொல்லுகிறார்களேயொழிய மடலெடுத்து முடிக்கக்கூடிய ப்ரக்ருதி களல்லரே இவர்கள். தங்கள் தாழ்வை நினைத்து அகன்றதும், ப₄க₃வத்₃விஷயத்தின் சிறப்பை அநுஸந்தி₄த்தன்றோ. அந்த கு₃ணப் பெருமையையும் விஷயச்சிறப்பையும் அனுஸந்தி₄த்தபடியாலன்றோ அதைப் பிரிந்திருக்கப் பொறுக்கமாட்டாமல் இவர்கள் ஸ்வரூபத் துக்குத் தகாத நோன்பு, மடல் முதலான செயல்களில் ஈடுபட்டு அவனைப்பெற விரும்புகிறது.

விஷயச்சிறப்பு ஒன்றே அகல்வதற்கும், கிட்டுவதற்கும் காரண மாமோ? என்னில், விஷயச்சிறப்பைப் பார்த்துவிட்டு, தங்கள் தாழ்மையையும் அநுஸந்தி₄க்கும்போது "நாம் கிட்டலாகாது" என்று அகலுவர்கள். அவனை அநுஸந்தி₄ப்பதிலேயே ஈடுபட்டிருக் கும்போது, தங்கள் தாழ்வை நினையாமல் அவனை அனுப₄விக்க முற்படுவர். ஆராவமுதமான அவனை அனுப₄விக்கும்போது தங்கள் தாழ்மை தோன்றாதன்றோ. அதனாலே மேல் விழுகிறார்கள்.

ஆனல் அவர்கள் பிராட்டிமார் பேச்சைப் பேசுவா னென்னென்னில், ஆத்ம ஸ்வரூபவைலக்ஷண்யத்தாலும், அநந்யார்ஹஶேஷத்வாதிகளாலும், அந்வயத்தில் தரிக்கையாலும், வ்யதிரேகத்தில் தரியாமையாலும், ஜ்ஞாநம் விஶதமானல் இவ்வாத்ம வஸ்துவும் பிராட்டிமாரோடொக்குமாகையாலும், இவர்களும் * மயர்வற மதிநலம் அருளப்பெற்றவர்களாகையாலே பிராட்டி பேச்சாலே பேசுகிருர்கள்.

"கடலன்ன கர்மத்தராகிலும் மாதர் மடலூரார் மற்றை யார்மேல்" என்று ஸ்த்ரீக்கள் புருஷர்கள்மேல் மடலூரக்கடவதல்லவென்று லக்ஷணங் காட்டிக்கிடக்கச் செய்தே, இப்பிராட்டி மடலூருவானென்னென்னில்; ஆஶை ஒருதலைக்கேயாய், ஒருதலை லக்ஷணப்படியே ஆஶையை

---

**ஆயினும், தாமான தன்மையிலேயிருந்து பேசாமல், பிராட்டிமார் தஶையடைந்து பேசுவானென்? என்னில்: ஆத்மாவின் ஸ்வரூப நிரூபக தர்மங்கள் பெண்களினுடைய அஸாதாரணகுணங்களைப்போலே சிறந்து விளங்குகையாலும், முக்கியமாக அநந்யார்ஹஶேஷத்வம், அநந்யஶரணத்வம், அநந்யபோக்யத்வம் என்னும் பதிவிரதைக்குரிய குணங்கள் ஆத்மாவுக்கும் பரமபுருஷனைக்குறித்து உண்டாகையாலும், விஶேஷித்து ஆழ்வார்களைப்போன்ற மஹான்கள் எம்பெருமானேடு கூடினல் தரித்து நின்றும், பிரிந்தால் தரியாமலுமிருப்பதாலும், முக்திதஶையில் ஞானம் விரிந்தால் இவ்வாத்மவஸ்துவும் பிராட்டிமாரைப் பெரும்பாலும் ஒத்திருக்கையாலும், இவ்வாழ்வார்கள் இவ்வுலகிலிருக்கும்போதே • மயர்வற மதிநலம் அருளப்பெற்றவர்களாகையாலே இங்கேயே பிராட்டிமாரோடு ஸாம்யமுண்டாகையாலும் பிராட்டி பேச்சாலே பலகாலும் பேசுகின்றனர் ஆழ்வார்கள்.**

**"கடலன்ன காமத்தராகிலும் மாதர் மடலூரார் மற்றையார் மேல்" என்றும். "கடலன்ன காமமுழந்தும் மடலேருப் பெண்ணிற் பெருந்தக்கதில்" [திருக்குறள்-1137] என்றும் தமிழ்ப்பிரபந்தங்களிற் சொன்னபடியே ஸ்திரீகள் புருஷர்கள்மேல் மடலூரலாகாது என்று லக்ஷணம் சொல்லியிருக்கும்போது, பிராட்டி தஶையை அடைந்த இவர் மடலூரலாமோ? எனில்: ஆண் பெண் இருவரில் வரம்பில்லாத ஆஶை ஆண்களுக்கேயாய், பெண்களுக்கு லக்ஷணவரம்புக்குட்பட்டு**

மர்யாதையிலே நடத்தலாமாகில் அது செயயலாவது; ஆசைமிக்கார் மடலூருமத்தனை' என்னும் ஆர்ய மர்யாதையாலே மடலூர உபக்ரமிக்கிறார்கள்.

பின்னைத் தமிழர் செய்ததுக்கு ஹ்ருதயமென்னென்னில்; ராஜாஜ்ஞையிலே ஆசையை வரம்புகட்டப் பார்த்ததுக்கு ஹ்ருதயமேது என்று அறிந்ததில்லை.

மயர்வற மதிநலம் அருளப்பெற்றவர்கள்,'அறிவுடையாராகில் அநுஷ்டிக்கக்கடவதல்ல' என்று அவர்கள் நிஷேதித்த காமத்தை அநுஷ்டிக்கிறார்களோவென்னில்; அப்படி நிஷேதித்த காமமல்ல. "**निदिध्यासितव्यः**" (நிதித்யா

---

ஆசை அளவு பட்டுச் செல்லலாமாகில் அது நடக்கலசம். ஆனால் அப்படியில்லையே. ஆண் பெண் இருபாலர்க்கும் ஒக்க ஆசை வரம்பு கடந்து செல்வதையன்றோ காண்கிறோம். ஆகையால், ஆசைமிகுந்தவர் யாராயினும் மடலூரலாம் என்னும் வடமொழி மர்யாதையையொட்டி மடலூர ஆரம்பிக்கிறாள் இப்பிராட்டி.

ஆணுயினும் பெண்ணுயினும் ஆசை வரம்பு மீறுவது இற்கையாயிருக்க, தொல்காப்பியம் முதலிய நூல்களில் தமிழர் வரம்புகட்டியதற்குக் கருத்தென்ன? எனில், அரசராணையாலே ஆசையைக் கட்டுப்படுத்துவதுபோலே, லக்ஷணவரம்புகட்டிக் கட்டுப்படுத்த நினைத்ததற்குக் கருத்து என்னவென்று அறிந்தோமில்லை. "மானேக்கின் அன்ன நடையார் அலரேச ஆடவர்மேல், மன்னு மடலூராரென்பதோர் வாசகமும் தென்னுரையில் கேட்டறிவதுண்டு, அதனை யாம் தெளியோம் மன்னும் வடநெறியே வேண்டினோம்" என்று இவ் வாழ்வாரே பெரிய திருமடலில் அருளிச்செய்கையாலே, தமிழர் பெண்ணின் ஆசைக்குக் கட்டுப்பாடு ஏற்படுத்தியது ஆசையின் இயற்கையை அறியாமல் செய்ததே என்று கொள்ளவேண்டும்.

மய்ர்வற மதிநலம்அருளப்பெற்ற இவ்வாழ்வார்கள்,"அறிவுடையவர்களாகில். அவர்கள் காமநெறியைக் கடைப்பிடிக்கமாட்டார்கள்" என்று அறிவாளிகள் தடைசெய்த காமத்தைக் கடைப்பிடிக்கிறார்கள் போலிருக்கிறதே என்னில்; இவர்கள் இப்பிரபந்தங்களிலே பற்றியிருப்பது அப்படித் தடைசெய்யப்பட்ட ப்ராக்ருதகாமமன்று. "ஆத்மா வா அரே த்ரஷ்டவ்ய: ஶ்ரோதவ்யோ மந்தவ்யோ நிதித்

ஸிதவ்ய:) என்று வேதாந்தத்திலே விதிக்கிற பகவத் பக்தியைக் காமமென்கிறது; ஆகையாலே விஹிதமான வ்ருத்தி(பக்தி)யைக் காமமென்கிறது. "மடலெடுக்கை யாவது—தன்னுடைய ஸ்த்ரீத்வத்துக்கும் அவனுடைய புருஷோத்தமத்வத்துக்கும் சேருவதொன்றன்று; அவன் தானே வரக் காண்கைகாண் ஸ்த்ரீத்வமாவது" என்று விலக்குகிறவர்களைக் குறித்து, "மநோஹாரி சேஷ்டிதங்களிலே அகப்பட்டு அபஹ்ருதசித்தையானேன்; 'அவன் தானே வருகிறுன், அவனுக்கு நிறக்கேடு விளைக்க வொண்ணுது' என்கிற இதுவும் செய்தற்றது. இனி மடலெடுத்து அவனைப் பெற்றல்லது தரியேன்" என்கிற தன் துணிவை, (விலக்குகிற பந்துக்களுக்குச்) சொல்லுகிறுள். மடலெடுக்கப்புக்கவள் விளம்பிக்கிறதுக்கு ஹேதுவென்னென்னில்; ஹேதுக்களாலே பந்துக்களை இசைவிக்கைக்காகவும், குணாதிக வஸ்துவைக் கடுக அழிக்கலாகாதென்றும், வருகைக்கு அவகாஶ ப்ரதாநம் பண்ணுகைக்காகவும் விளம்பிக்கிறுள்.

---

யாஸிதவ்ய:" [ப்ருஹ 4-4-5] [கேட்கத்தக்கவனும், நினைக்கத்தக்கவனுமான பரமாத்மா தியானிக்கத்தக்கவன்; காணத்தக்கவன்] என்று உபநிஷத்துக்களிலே விதிக்கிற பகவத்பக்தியை இங்கு காமமென்கிறது. "அத்யந்த பரதந்திரையான உன் பெண்மைக்கும், அவனுடைய பேராண்மைக்கும் நீ மடலெடுக்கும் காரியம் ஒட்டாது. அவன் தானே வரக்கண்டிருக்கைதான் பெண்மைக்குரியது" என்று விலக்குகிற உறவினரைக் குறித்து, "அப்பரமபுருஷனுடைய தான நெஞ்சையிழுக்கும் செயல்களிலே ஈடுபட்டு நெஞ்சிழந்தேன். 'அவன் தானே வரட்டும். நாம் மடலெடுப்பது முதலான தகாத செயல்களைச் செய்து அவனுக்கு குணஹானியை விளைக்கக்கூடாது' என்னும் நிலையிலும் இருந்து பார்த்தேன். அப்படியும் வருகின்றிலன். என்னும் பிரிந்து உயிர்தரிக்க முடியவில்லை. இனி, மடலெடுத்து அவனைப்பெற்றலல்லது தரிக்கமாட்டேன்" என்கிற தன் துணிவைச் சொல்லுவதே மடலெடுப்பதாகும். மடலெடுக்கப்புகுந்த இவள், நேரே மடலெடுத்து முடிக்காமல் துணிவைச் சொல்லிக்கொண்டு 'காலதாமதம் செய்வதற்குக் காரணமென்னவெனில்: மடலெடுக்கவேண்டிய காரணங்களைச் சொல்லி, உறவினர்களைத் தன் செயலுக்கு இசையச்

### திருமங்கையாழ்வார் அருளிச்செய்த

# சிறிய திருமடல்

---

## காரார்வரைக்கொங்கைக் கண்ணார் கடலுடுக்கை

*பதவுரை:— கார் ஆர் வரை கொங்கை*—மேகங்கள் நிறைந்து படியப்பெற்ற (திருமாலிருஞ்சோலையும் திருவேங்கடமுமாகிற) திருமலைகளை முலையாக உடையளாயும், *கண் ஆர் கடல் உடுக்கை*— பரந்த கடலைச் சேலையாகவுடையளாயும்,

---

**வ்யா:**— (காரார்வரையித்யாதி) "தாய்மார் தோழிமார் எல்லாரும் 'இத்துணிவு ஆகாதுகாண்' என்று விலக்கா நிற்கச்செய்தே, விலக்காதாளொருத்தியைப் பெறுவதே!; என்று கொண்டாடுவாரைப்போலே, புருஷார்த்தங்கள் சொல்லவேண்டுகையாலே, அவை பரிக்ரஹித்த சேதநரைச் சொல்லவேண்டி, அவர்கள் வர்த்திக்கிற பூமியைச் சொல்லப்புக்கு, அவ்வழியாலே அதுக்கு அபிமாநிநி யான ஸ்ரீபூமிப்பிராட்டியை வர்ணிக்கிறுள்.

---

செய்வதற்காகவும், குணச்சிறப்பு மிக்க அவனை அவஸரப்பட்டு அழிக்கலாகாது என்னும் நினைவாலும், வருவதற்கு அவகாச மளிப்பதற்காகவும் தாமதிக்கிருள்.

வ்யா:—(காரார் வரைக்கொங்கை...நிலமங்கை) இப்போது இப்படி பூமிப்பிராட்டியைக் கொண்டாடக் காரணம் என்னவெனில்: "தாய்மார் தோழிமார் ஆகிய அனைவரும் இம்மடலெடுக்கும் உறுதி உன் தன்மைக்குச் சேராதுகாண்!" என்று தடைசெய்துகொண்டிருக்கும்போது, தடைசெய்யாதவளான இப்பூமிப்பிராட்டியைப் பெற்று வைத்தோமே என்று கொண்டாடுவதுபோலே வர்ணிக்கிருள். மேலும், தாம் பற்றிய காமபுருஷார்த்தத்தைச் சொல்லவேண்டிய இடத்தில், புருஷார்த்தங்கள் யாவையென்று சொல்லவேண்டியிருக்கையாலும், அவற்றைச் சொல்லும்போது அவற்றைப் பற்றும் சேதனரைச் சொல்லவேண்டுகையாலும், அவர்களைச் சொல்லும்போது அவர்கள் வாழும் பூமியைச் சொல்லவேண்டுகையாலும், இவ்வழியாலே பூமிக்கு அபிமானினியான ஸ்ரீ பூமிப்பிராட்டியை வர்ணிக்கிருள்.

(காரார் வரைக் கொங்கை) ஸ்ரீபூமிப்பிராட்டிக்கு முலையாக மலைகளைச்சொன்னபடி; காரார்வரை என்கையாலே 'செறிந்து மேகம் படிந்த மலை' என்று மலைக்கு உயரம் சொல்லிற்று. மேகம் படிந்த மலையென்கையாலே முலைக்கண் கருத்திருந்தாற்போலே இருக்குமென்கை. மலைகளை முலையாக்கிச் சொல்லிற்றாகில், எம் மலைகளைச் சொல்லிற்றென்னில்; திருமலைகளிரண்டையும் முலையாகச் சொல்லிற்றென்னுமிடஞ் சொல்லிற்று; "தென்னனுயர் பொருப்பும் தெய்வ வடமலையும் என்னுமிவையே முலையா" என்று பெரிய திருமடலிலே சொல்லிற்று. ஸ்ரீபூமிப் பிராட்டிக்கு மலை சொல்லுகிறதாகில் உயர்ந்த மேரு ப்ரப்ருதிகளைச் சொல்லாதே இவற்றைச் சொல்லுவா னென்னென்னில்; முலையாவது காந்தன் படுகாடுகிடக்கு மிடமிறே; அப்படியே எப்போதுமொக்க பகவத் ஸந்நிதி யுள்ள தேசமாகையாலே திருமலைகளைச் சொல்லிற்று.

---

**(காரார் வரைக் கொங்கை) ஸ்ரீபூமிப்பிராட்டியாகிற பெண்ணுக்கு மலைகளை முலைகளாகச் சொன்னபடி. (கார் ஆர்ந்த வரை) என்கையாலே மேகங்கள் நெருங்கிப் படிந்த மலை என்று மலைகளின் உயரம் சொல்லிற்று. உத்தமஸ்த்ரீகளின் தனங்கள் பருத்து உயர்ந்து இருக்குமாகையாலே காரார்வரையைக் கொங்கையாக்குகிறுர். 'மேகம் படிந்தமலை' என்கையாலே முலைக்கண் கறுத்திருப்பதுபோலே இம் மலையுச்சியும் கறுத்திருக்கிறது என்கை. முலைகள் இரண்டன்றோ; மலைகளை முலைகளாகச் சொன்னால் எவ்விரண்டு மலைகளைச் சொல் லிற்று என்னில்,—"தென்னனுயர் பொருப்பும் தெய்வ வடமலையு மென்னுமிவையே முலையா" என்று பெரிய திருமடலிலே இவ்வாழ் வாரே அருளிச்செய்கையாலே, திருமாலிருஞ்சோலைமலையையும், திருவேங்கடமலையையும் முலைகளாகச் சொல்லுகிருள். உத்தமநாயகி யான ஸ்ரீபூமிப்பிராட்டிக்கு முலைசொல்லுகிறதாகில் மிகவுயர்ந்த மேருமலை முதலானவற்றைச் சொல்லாமல் இவற்றைச் சொல்லு வதேன்? எனில்: "நப்பின்னை கொங்கைமேல் வைத்துக்கிடந்த மலர் மார்பா" "மலரான் தனத்துள்ளான்" "சங்கு தங்கு முன்கை நங்கை கொங்கை தங்கலுற்றவன்" என்று முலையானது மணவாளன் பற்றிக்கிடக்குமிடமாகையாலே, அதற்கேற்ப எக்காலத்திலும் பகவத்**

**சீரார் சுடர்ச் சுட்டிச் செங்கலுழிப் பேராற்று (ப்) 1.**

***சீர் ஆர் சுடர் சுட்டி***— அழகிய கிரணங்களுடைய ஸூர்யனை திலகம் என்னும் ஆபரணமாகவுடையவளாயும், ***செம் கலுழி பேர் ஆறு*** — சிவந்து கலங்கியுள்ள பெரிய (காவிரி) ஆற்றை,

---

(வரைக்கொங்கை) முலைக்குக் காடிந்யம் ஸ்வபாவமாயிருக்குமிறே; அதுவும் சொல்லுகிறது.

(கண்ணார் கடலுடுக்கை) கண்ணார் கடலென்கையாலே — தர்ஶநீயமான கடலென்னுதல், இடமுடைத்தான கடலென்னுதல். இடமுடைத்தாகையாவதென்னென்னில்; ஸ்ரீபூமிப்பிராட்டிக்குக் கொடுக்கும் கொய்சகமும் வைத்து உடுக்கலாம்படி பரப்பையுடைத்தாயிருக்கை. (கடலுடுக்கை) திருமேனியின் ஸௌகுமார்யத்துக்கீடாக உறுத்தாமே குளிர்ந்திருக்குமென்கை.

(சீரார் சுடர் சுட்டி) அழகிய சுடரையுடைய ஆதித்யன் இவளுக்குத் திலகமென்கை. அன்றிக்கே, அணிமிகு

---

**ஸந்நிதியுள்ள இம்மலைகளை முலைகளாகச் சொல்லுவதே பொருத்தமுடைத்து. (வரைக் கொங்கை) உத்தம ஸ்த்ரீகளின் தனங்கள் கடினத்தன்மையை இயல்பாகக் கொண்டிருக்குமன்றோ. அதற்காகவும் மலையை முலையாகச் சொல்லுகிறது.**

**(கண்ணார் கடல்) காண்பவருடைய கண்களை நிறைவைச்செய்யும் கடல்; அதாவது காணத்தக்க கடல். அன்றிக்கே, 'கண்' என்று இடமாகையாலே, இடம் நிறைந்த கடல் என்றும் கொள்ளலாம். (கண்ணார் கடல் உடுக்கை) பூமிப்பிராட்டிக்கு மிக அழகிய கடல் நீலவர்ணச்சேலையாயிருக்கிறது. இடமுடைத்தான கடல் என்னும் போது பிராட்டிக்கு முந்தானையும், கொய்சகமும் வைத்து உடுக்கலாம்படி பரந்திருக்கிறது என்றபடி. (கடலுடுக்கை) திருமேனியின் மென்மைக்குத் தக்கபடி உறுத்தாமலும், குளிர்ந்துமிருக்கும் என்கை.**

**(சீரார் சுடர் சுட்டி) அழகிய கிரணங்களையுடைய சூரியன் இவளுக்குத் திலகமாவான். 'சுடர்' என்று கிரணங்களைச் சொல்லி சீரார்சுடர் என்று அவற்றையுடைய சூரியனைச் சொல்லுகிறது.**

தாமரைக்கை ஆப₄ரணமாகக்கடவ தலைக்குத் தான் ஆப₄ரணமாகப்பெறுகையாலே வந்த சீர்மையாகவுமாம்.

(செங்கலுழிப் பேராற்றுப் பேராரமார்வில்) ஸஹ்யத்திலே வர்ஷிக்கச் சிவந்த கலக்கத்தை உடைத்தாகையாலும், மலையிலுண்டான பொன் முதலான ரத்நங்களை

---

''சீரார்'' என்றது கிரணங்களுக்கு விசேஷணம். சீர்மை நிறைந்திருக்கையாவது அழகு மிக்கிருக்கை. அன்றிக்கே. ''சுடர்'' என்று நேரே சூரியனைச் சொல்லும்போது, ''சீரார்'' என்றது அவனுக்கு விசேஷணமாகிறது. சூரியனுக்குச் சீர்மையாவது:— ''அணிமிகு தாமரைக் கையை அந்தோ அடிச்சியோம் தலைமிசை நீ யணியாய்'' [திருவாய் 10-3-6] என்கிறபடியே ப₄க₃வானுடைய திருக்கை ஆப₄ரணமாயிருக்கவேண்டிய பிராட்டியின் தலைக்குத் தான் ஆப₄ரணமாகப்பெறுகையாலே வந்த சீர்மையைச் சொல்லுகிறது. ''ஆப₄ரணஸ்யாப₄ரணம்...வபுஸ்தஸ்யா:'' [விக்ரமோர்வசீயம்] [அவளுடைய மேனி ஆப₄ரணத்துக்கும் அழகுகொடுக்கும் ஆப₄ரணமாகிறது] என்றுப்போலே, ஆப₄ரணத்துக்கும் அழகு கொடுக்குமவர்களன்றோ பிராட்டிமார்.

(செங்கலுழிப் பேராற்றுப் பேராரமார்வில்) பேராறானது பிராட்டிக்கு மார்வாயிருக்கிறது. மார்பாகில் முலைகளுக்குக் கீழுள்ளதாய், சந்த₃னம், குங்குமம் முதலானவற்றால் பூசப்பட்டிருக்கவேண்டுமே, இங்கு அப்படியுண்டோ? எனில்:

''மலைத்தப் பிறந்திழிந்து வந்து நுந்து சந்தனம்
குலைத்தலைத்திறுந்தெறிந்த குங்குமக் குழம்பினோடு
அலைத்தொழுகு காவிரி'' [திருச்சந்த-54]

என்கிறபடியே, இதுவும் மலையிலே பிறந்து கீழிறங்கி வருவதாய், மலையிலுண்டான சந்த₃னம் குங்குமம் முதலானவற்றை அடித்து வருகையால் கலங்கிச் சிவந்தன்றோ இருப்பது, மார்வாகில் பெரிய முத்து ரத்தினமாலைகளாலே அலங்கரிக்கப்பெற்று விளங்குமே; இங்கும் அப்படியோ எனில்;

''............ஆளரியால்
அலைப்புண்ட யானை மருப்பும் அகிலும்
அணிமுத்தும் வெண்சாமரையோடு பொன்னி
மலைப்பண்ட மண்டத் திரையுந்து'' [பெரியதிரு 3-8-3]

**பேரார மார்வில் பெருமா மழைக்கூந்தல்**
**நீரார வேலி நிலமங்கை யென்னுமிப்** 2.

***பேர் ஆரம் மார்வில்***—சிறந்த ஹாரம் பூண்ட மார்பாக உடையளாயும், *பெரு மா மழை கூந்தல்* - பெருத்துக் கறுத்த மேகங்களைக் கூந்தலாக உடையவளாயும், ***ஆரம் நீர் வேலி***—ஆவரண ஜலத்தைக் காப்பாகவுடையவளாயுமிருக்கிற, ***நிலமங்கை என்னும்*** — ஸ்ரீ பூமிப் பிராட்டியென்று சொல்லப்படுகிற,

---

உடைத்தாகையாலும், பூமியெங்கும் பரவிக்கொண்டு வருகையாலும், வி(க?)லங்கிக்கிடக்கிற ஆருகிற ஹாரம் கிடக்கிற மார்பையுடையவள். (பெரு மா மழைக் கூந்தல்) பெரு-பெருத்து, மா-கறுத்த, மழை-மேகங்கள்: நீர்கொண்டெழுந்த காள மேகத்திரளே இவளுக்கு மயிர்முடி; அதா

---

**"சந்திரேடு மணியும் கொழிக்கும் புனற்காவிரி"**
[பெரியதிரு 5-4-1]

**"வேயின்முத்தும் மணியும் கொணர்ந்தார் புனற்காவிரி"**
[பெரியதிரு 5-4-9]

**"சஞ்சச்சாமர சந்த்ரசந்தந மஹாமாணிக்ய முக்தோத்கராந்
காவேரீ லஹரீகரைர் விதததீ பர்யேதி"** [ர-ஸ்த 1-21]

**[விளங்கா நின்ற சாமரங்களென்ன, பச்சைக் கருப்பூரமென்ன. சந்தன மரங்களென்ன, சிறந்த ரத்தினங்களென்ன, முத்துக்களென்ன இவற்றினுடைய குவியல்களை அலைகளாகிற கைகளால் ஏந்திக் கொண்டு பெருகுகிறது.] என்று திருமங்கையாழ்வாரும், பட்டரும் அருளிச்செய்தபடியே, இவ்வாறும் மலையிலுள்ள முத்துக்களையும், ரத்தினங்களையும் அடித்துக்கொண்டன்றோ வருகிறது. மார்பாகில் புரத்திருக்குமாபோலே இவ்வாறும் பூமியெங்கும் பெருகிப்பரந்து வருகிறபடி. "செங்கலுழிப் பேராறு" என்று பொதுவாகச்சொன்ன போதிலும், உத்தமநாயகியின் மார்வானது நாயகனை அணைத்துக் கிடப்பதையே தொழிலாக உடையதாகையாலே, இருபுறமும் அரங்க நகரப்பனை அணைத்துக் கிடக்கும் தெளிவிலாக்கலங்கல் நீராகிய காவிரியே இங்கு மார்வாகக் குறிப்பிடப்படுகிறது. (பெருமா மழைக் கூந்தல்) பெருத்துக் கறுத்த மேகங்களைக் கூந்தலாக உடையவள். நீர்கொண்டெழுந்த காளமேகக் கூட்டமே இவளுக்கு மயிர்முடி.**

வது - இந்த்ரதநுஸ்ஸும், மின்னும் கலம்பகன் சூடினாற் போலே இருக்கையாலே, மேகத்தை மயிர்முடியென்கிறது. காந்தனுக்கு தர்ஶநீயமாயிருக்கையும், ஒருகால் குலைத்து நுழுந்த விடாய் ஆறும்படியாயிருக்கையும்.

(நீராரவேலி) ஆவரணஜலமே இவளுக்குக் காப்பென்னுதல், மர்யாதையென்னுதல். குளிர்த்தியையுடைத்தான சந்தநத்தோபாதியாய் நாமத்தையுடைய

---

உத்தமப்பெண்களின் கூந்தல் கறுத்தும், அடர்த்தியாகவும், பல வர்ணக் கதம்பப்பூச்சூடியும், கணவனின் கண்களைக் குளிரச்செய்வதாகவும், அவன் ஒருதடவை (இம்மயிர்முடியைத்) தொட்டுக்கலைத்துக் கைவிட்டாலும் எல்லாத் தாபங்களும் ஆறும்படியாகவும் இருக்குமன்றோ. அப்படியே இப்பெருமாமழைக்கூந்தலும், பெருத்தும் கறுத்துமிருக்கிறது. இந்திரதநுஸ் என்னும் வானவில்லும், மின்னலுமாகிற பலவர்ணக்கதம்ப மாலையைச் சூடியுமிருக்கிறது. கண்களைக் குளிரச்செய்வதாகவும், ஒரு பாட்டம் மழை பொழிந்தால் ஸகல தாபங்களையும் ஆற்றுவதாகவுமிருக்கிறது. (பெருமாமழைக்கூந்தல்)

"கொள்கின்ற கோளிருளைச் சுகிர்ந்திட்ட கொழுஞ்சுருளின்
உள்கொண்ட நீல நன்னூல் தழைகொல் அன்று
மாயன்குழல்" [திருவாய் 7-7-9]

எனப்படும் "குழலழகர்" [நாச்-திரு 11-2] ஆன அவருக்குப் பொருத்தமான குழலழகியாயிருக்கிறாள் இப்பிராட்டி.

உத்தமநாயகியாகில் கட்டும் காவலுமாயிருப்பளே; அக்காவல் இவளுக்குண்டோ? எனில் உண்டென்கிறார் அடுத்தபடியாக.—(நீரார வேலி) ஆரம் நீர் வேலி. ஆரம்போல் இவ்வண்டத்தைச் சுற்றியிருக்கும் ஆவரணஜலம் ஆரநீராகிறது. ஆவரண நீர் என்பது ஆர நீராகச் சிதைந்ததென்பாருமுண்டு. ஆவரணஜலமாகிற பெரிய அகழியை ரக்ஷையாக உடையவள் என்றபடி. அன்றிக்கே, (நீரார வேலி) ஆரம் நீர் வேலி; 'ஆரம்' என்று சந்தனத்துக்குப்பெயர். 'நீர்' என்று நீர்மை, 'ஆரநீர்' என்று சந்தனம்போல் குளிர்ந்த தன்மையுடைய இப்பிராட்டியின் கற்பைச் சொல்லுகிறது. 'வேலி' என்பது வரம்பு அல்லது எல்லை. சந்தனம்போல் குளிர்ந்த கற்பை வரம்பாகவுடையவள் - தன் பெருமைக்கு எல்லையாகவுடையவள் இப்பிராட்டியென்கை. இவளுக்குக் கற்பாவது— " வாமனன் மண் "

**பாரோர் சொலப்பட்ட மூன்றன்றே—அம்மூன்றும்**
**ஆராயில் தானே அறம்பொரு ளின்பமென்று— 3.**

*இப் பாரோர்*—இந்நிலவுலகத்திலே உள்ளவர்களால், *சொலப்பட்ட*— சொல்லப்படுகின்ற புருஷார்த்தங்கள், *மூன்று அன்றே* — மூன்றல்லவா: ***அம்மூன்றும் ஆராயில்*** — அம்மூன்று புருஷார்த்தங்கள் எவையென்று ஆராய்ந்தால், *அறம் பொருள் இன்பம் என்று தானே*—தர்மம் அர்த்தம் காமம் என்பனவாம்.

---

கற்பே இவளுயரத்துக்கு எல்லையென்கை. (நிலமங்கை யென்னுமிப்பார்) பூமியைச் சொல்லப்புக்கு அதுக்கு ப்ர காரியான ஸ்ரீபூமிப்பிராட்டியளவும் சொன்னபடி. (பாரோர் சொலப்பட்ட மூன்றன்றே) சிறியார் பெரியாரென்னுதே, விலக்ஷணர் அவிலக்ஷணர் என்னுதே, பூமியிலுண்டான

---

என்கிறபடியே அவனுக்கேயாயிருக்கை. ''சந்தனம்போல் குளிர்ந்த கற்பு'' என்கையாலே நாயகனுக்குத் தாபத்தைத் தரும் கற்பல்ல இவளுடைய கற்பு என்று தோற்றுகிறது. தாபத்தைத் தரும் கற்பாவது—தன் நாயகன் மற்ற மனைவியரிடம் பிரியம் வைப்பதையும் பொறுக்காதபடி அவனுக்கு ஆட்பட்டிருக்கை, இப்பிராட்டியோ வெனில் பெரியபிராட்டியாரும் பெருமாளும் கூடியிருக்கும்போது மாலை சந்தனம் முதலான உபகரணங்கள்போலே விளங்கி ஸாபத்ந்ய மற்றவளாயிருக்கையாலே, இவள் சந்தனம்போல் குளிர்ந்த கற்பை யுடையவளாகிறாள். இதுவே இவளுடைய பெருமைக்கு எல்லையா கிறது என்கை. இப்படிப்பட்டவள்தான் யார் என்னில் (நில மங்கை) பூமிதேவியே இவள் என்கை. (மங்கை) முற்கூறியபடி பெண்மைக்குரிய குணங்கள் நிரம்பியிருப்பவள் என்கை. (நிலமங்கை என்னுமிப்பார்) புருஷார்த்தங்களைச் சொல்லப் புகுந்து, அதை அனுஷ்டிப்பாரைச் சொல்லுவதற்குமுன், அவர்களுக்கு இருப்பிட மான பூமியைச் சொல்லப்புக்கு அப்பூமிக்கு ப்ரகாரியான ஸ்ரீபூமிப் பிராட்டியளவும் சொன்னாராயிற்று. (இப்பாரோர் சொலப்பட்ட மூன்றன்றே) இப்பூமியிலுள்ளவர்களால் பற்றப்படும் புருஷார்த்தங்க ளாகச் சொல்லப்படுமவை மூன்றேயல்லவோ? (சொலப்பட்ட) சொல்லைச்சொன்னது, பற்றுகையாகிற செயலுக்கும் உபலக்ஷணம், (பாரோர்) சிறியவர், பெரியவர் என்னும் வாசியில்லாமல், உயர்ந் தார் தாழ்ந்தார் என்னும் வாசியில்லாமல், சேதனர் அனைவராலும்

**ஊரா ருகப்பதே யாயினேன் மற்றெனக்கிங்கு**
**ஆராய்வா ரில்லை அழல்வாய் மெழுகுபோல் 62**
**நீரா யுருகுமென் னாவி நெடுங்கண்கள்**

***ஊரார் உகப்பதே ஆயினேன்***—ஊரார் ஆநந்தி3க்கும்படியாகவே நிலைகுலைந்தேன்! ***எனக்கு இங்கு மற்று***—எனக்கு இங்கு வேறு எவரும், ***ஆராய்வார் இல்லை***—பேச்சுத்துணை இல்லை; ***என் ஆவி***—எனது ஆத்ம வஸ்து, ***அழல் வாய் மெழுகுபோல் நீர் ஆய் உருகும்***—நெருப்பினருகே வைத்த மெழுகுபோல் நீர்ப்பண்டமாக உருகாநின்றது; ***நெடு கண்கள் தான்***—நீண்ட கண்களும்,

---

யாயினேன்) தங்களபி4மதஸித்3தி4, ஸாத4நாநுஷ்டா2நத்தாலே என்றிருக்குமவர்களைப்போலே, என்னபி4மதத்துக்கும் நான் உத்ஸாஹிக்கும்படியானேன்; ஊரார்வார்த்தை—"அவனாலே பேறு என்றிருந்த இவள் கண்டாயே உண்டபடி; இவளைப்போலே உண்ணுமத்தனை அவன் கை பார்த்திருந்தவர்கள்" என்பார்களே அவர்கள்.

இப்படி ஆற்றாமை மிக்கால் சில பேரோடே உசாவி த4ரிக்க வேண்டாவோவென்னில்; (மற்றெனக்கிங்காராய்வா

---

**உகப்பதே ஆயினேன்) தாங்கள் விரும்பியதைப் பெறுவதற்கு அதற்குரிய உபாயங்களை அனுஷ்டி2த்துத்தான் ஆகவேணும் என்று நினைத்திருப்பவர்கள் விரும்பியதுபோலே, நான் விரும்பியதைப்பெற நான் முயற்சிசெய்யும் நிலையை அடைந்தேன். "ஊரார்" என்று இவளிடம் ஆத3ரவற்றவர்களைச் சொல்லுகிறது. 'எல்லாவற்றுக்கும் எம்பெருமானே உபாயம்; நாம் அனுஷ்டி2க்குமது எதுவும் அவனைப் பெற உபாயமல்ல' என்று முன்பெல்லாம் சொல்லுவாள் இவள்; இவளை இடித்துக்காட்டும் நேரம் வருமோ? என்று எதிர்பார்த்திருந்த அவர்கள் இப்போது சொல்லுகிறார்கள்,—"'அவனாலே பேற்றைப் பெறவேணும்' என்று நினைத்திருந்த இவள் அநுப4விக்கும்படியைப் பார்த்தீர்களா! 'அவனே உபாயம்' என்பவர்களெல்லாம் இப்படித்தான் படவேணும்; அவர்களும் நம் வழிக்குத் திரும்பியே தீருவர்கள்" என்று தங்கள் ஆசைதீரச் சொல்லும்படியான நிலையை அடைந்தேன்.**

**இப்படிப் பிரிவாற்றாமை மிகுந்தால் சிலருடன் வார்த்தைச் சொல்லி உயிர்த4ரிக்கக்கூடாதோ? எனில்; (மற்றெனக்கிங்கு ஆராய்**

ரில்லை) என்னெஞ்சம் எனக்கு உதவாதிருக்க வேறு நமக்கு இங்கு உசாத்துணையுண்டோ? "மற்றில்லை" என்கையாலே இன்னமும் அவனேவந்து ஆராயில் ஆராயுமத்தனை என்கை; "அவ்வருளல்லன அருளுமல்ல" என்றும், "வையகத்துப் பல்லாரருளும் பழுது" என்றுமிறே இவர்கள்தாங்கள் அறுதியிட்டிருப்பதும். (அழல்வாய் மெழுகு போல் நீராயுருகுமென்னுவி) நெஞ்சு உதவாதென்னலாமோ? நெஞ்சைப்பிடித்து தரித்திருக்கவேண்டாவோ? என்னில், அக்நிஸகாஶத்திலே மெழுகுபோலே இற்றுப் போகாநின்றது என்னுடைய ஆத்மவஸ்து.

(நெடுங்கண்களூராருறங்கிலும் தானுறங்கா) இப்படி ஆற்றாமை விளைந்ததாகில், நித்ரையாலே அத்தைப் போக்கினாலோவென்னில், "ஆயுமமருலகுந்துஞ்சிலும்" என்கிறபடியே எல்லாருமுறங்கிலும் என் கண்கள் உறங்குகிறதில்லை. (நெடுங்கண்கள்) கண் பரப்பெல்லாம் தலைச்

---

வாரில்லை) என்நெஞ்சமே எனக்கு உதவாதிருக்க, வேறொரு பேச்சுத் துணை இங்கு யாருளர்? "மற்று இல்லை" என்கையால் இனியும் அவனேவந்து என் குறையை ஆராய்ந்தால் உண்டு; இல்லையேல் வேறு கதியில்லை என்றதாகிறது, "அவ்வருளல்லன அருளுமல்ல" [திருவாய் 9-9-6] என்றும், "வையகத்துப் பல்லார் அருளும் பழுது" [முதல்திருவ 15] என்றுமன்றோ இவ்வாழ்வார்கள் முடிவுகட்டியிருப்பது, (அழல்வாய் மெழுகுபோல் நீராயுருகும் என்னாவி) கையாலாகாதவர்களைப்போலே 'என்னெஞ்சும் எனக்குதவவில்லை" என்னலாமோ? நெஞ்சை பலாத்காரமாகப் பிடித்து நிறுத்தி தரித்திருக்க வேண்டாமோ?என்னில்: நெருப்பின் முன்னிலையில் மெழுகுபோலே இவ் விரஹ வேதனையாலே என்னுடைய ஆத்மாவானது உருகிப்போகும் போது நான் எப்படி நெஞ்சை பலாத்கரித்துப் பிடித்து நிறுத்துவது?

(நெடுங்கண்கள் ஊராருறங்கிலும் தானுறங்கா) இப்படிப் பிரிவாற்றாமை ஏற்பட்டதாகில் தூக்கத்தாலே அதனை மறந்திருக்கலாகாதோ? என்னில்: "ஆயும் அமருலகும் துஞ்சிலும் நீ துஞ்சாயால்" [திருவாய் 2-1-1] என்கிறபடியே தூங்காமல் ஸதாதர்ஶனம் பண்ணும் தேவர்கள் தூங்கினாலும், என் கண்கள் உறங்குவதாயில்லை. (நெடுங்கண்கள்) அவனை அகப்படுத்துவதற்குக் காரணமாயிருந்த

**ஊரா ருறங்கிலுந் தானுறங்கா வுத்தமன்றன்** 63
**பேரா யினவே பிதற்றுவன் பின்னையும்**
**காரார் கடல்போலுங் காமத்த ராயினர்** 64
**ஆரே பொல்லாமை யறிவார் அதுநிற்க**

*ஊரார் உறங்கிலும் உறங்கா*—ஊரிலுள்ள எல்லாரும் உறங்கும் போதிலும் உறங்கமாட்டா; *உத்தமன் தன்*—அப்புருஷோத்தமனுடைய, *பேர் ஆயினவே*—திருநாமங்களாயுள்ளவற்றையே, *பிதற்றுவன்*—வாய் வந்தபடி சொல்லிக்கொண்டிராநின்றேன்; *பின்னையும்*—மேலும், *கார் ஆர் கடல் போலும் காமத்தர் ஆயினர்*—ஆழ்ந்த கடல்போலே அளவுகடந்த காமத்தையுடையவர்கள், *ஆரே*—ஆர்தான், *பொல்லாமை அறிவார்*—ஸ்வரூபவிரோதமறிவர்கள்? *அதுநிற்க*—அது ஒருபுறமிருக்க,

---

சுமையாயிற்று. * அஸிதேக்ஷணையிறே. (ஊராருறங்கிலும் தானுறங்கா) "ஊரும் நாடுமுலகமும் தன்னைப்போல்" என்று இவள் பிறந்த ஊரிலே உறங்கியறிவாருமில்லையிறே. இப்படியிருக்கிற அவர்களுறங்கிலும் என் கண்கள் உறங்காவென்கிறார்.

(உத்தமன்) உறக்கமறும்படி தன் தாழ்ச்சியைக் காட்டி அகப்படுத்தின மேன்மையையுடையவன். (பேரா

---

கண்ணின் பரப்பெல்லாம் எனக்குத் தலைபாரத்திற்கே ஆயிற்று. 'அஸிதேக்ஷணா'[ரா ஸு 16-5] [கறுத்த கண்களையுடைய சீதாபிராட்டி] என்று கூடியிருக்கும்போது அவனையும் ஈடுபடுத்தவல்ல கண்களன்றோ இவளுடையது. (ஊராருறங்கிலும் தானுறங்கா) "தொல்லைமாலைக் கண்ணாரக்கண்டு கழிவதோர் காதலுற்றார்க்கும் உண்டோ கண்கள் துஞ்சுதலே" [திருவிருத்தம் 97] என்கிறபடியே இவளுக்குக் கண்ணுறக்கமில்லை என்பது ஸித்தம்; "ஊரும் நாடும் உலகமும் தன்னைப் போல்" [திருவாய் 6-7-2] என்கிறபடியே இவள் பிறந்த ஊரிலுள்ளாரும் உறங்கியறியார்கள். அவர்கள் ஒருவேளை உறங்கினாலும் என் கண்கள் உறங்கமாட்டா என்கிறாள்.

(உத்தமன்) ஸௌலப்யமாகிற பெருமையையுடையவன்; தான் தூக்கமற்றுப்போகும்படி தன் நீர்மையைக்காட்டி என்னை வசப்

யினவே பிதற்றுவன்) இப்படி அபிமதகாலத்தில் உதவா தொழிந்தால் அவனை நினையாதிருக்கவிறே அடுப்பது. அது மாட்டாதே, அவன் திருநாமங்களை அடைவுகெடச் சொல்லாநிற்பன்.

(பின்னையும்) அதுக்குமேலேயும் சில ஹிதஞ்சொல்ல. (காரார் கடல்போலும் காமத்தராயினார் ஆரே பொல்லாமை அறிவார்) இங்ஙன் சொல்லலாமோ? பத்து மாஸம் ஆறியிருந்திலளோ ஸ்ரீஜநகராஜன் திருமகள்? அப்படியிராவிடில் பொல்லாதாகாதோ? என்னில், பேராழமான கடல்போலே ஆசை கரைபுரண்டு போராநிற்க "பொல்லாங்கு சொல்லுவர்கள்" என்று ஆறியிருக்கப்போமோ? ஆறியிருந்தவர்களுக்கு ஆசை அளவுபட்டதாமித்தனையிறே. ஸ்வரூப ஜ்ஞாநத்தாலே ஆற்றலாமோ அவ்வடிவைக்

---

படுத்தின பெருமையை உடையவன். (பேராயினவே பிதற்றுவன்) இப்படி விரும்பியபோது உதவாவிடில் அவனை நினையாதிருப்பதன்றோ சிறந்தது. அதுவும் முடியாமல் அவன் திருநாமங்களைப் பிதற்றுவேன்; கிரமமில்லாமல் சொல்லுவேன். அத்யந்த பக்தியுக்தர்களால் முறையறிந்து பரிமாற முடியாதன்றோ.

(பின்னையும்) அதுக்குமேலேயும் சில நல்ல வார்த்தைகளைச் சொல்லுகிறார்கள். அதாவது:—"இப்படி பிரிவாற்றாமையாலே என் முயற்சியில் ஈடுபடலானேன் என்று நீ சொல்லலாமோ? ஜனகராஜன் திருமகள் பிரிந்து பத்துமாதம் பொறுத்திருக்கவில்லையோ? அப்படி நீயும் இல்லாவிடில் உன் ஸ்வரூபத்துக்கு இழுக்கன்றோ?" என்று. அவர்களுக்கு பதிலுரைப்பதற்காக 'மேலும்' என்று தொடங்குகிறாள். (காரார் கடல்போலும் காமத்தராயினார் ஆரே பொல்லாமை அறிவார்) நீர் நிறைந்து ஆழ்ந்திருக்கும் கடல்போலே ஆசை கரைபுரண்டு பெருகாநிற்க, "ஊரார் தூற்றுவார்கள்" என்று பொறுத்திருக்கமுடியுமோ? பிரிந்து பொறுத்திருந்தவர்கள் ஆராயிருந்தால் என்ன? அவர்களுக்கு ஆசை என்னைவிடக் குறைவானது என்றே கொள்ளவேண்டும். காண்பார் கண்ணையும் நெஞ்சையும் கொள்ளைகொள்ளும் கண்ணனின் கார்மேனியைக் காணவேணும் என்னும் ஆசை கரைபுரண்டிருக்கும் என் போன்றவர்க்கு ஸ்வரூபஜ்ஞானத்தால் பொறுக்க முடியுமோ? "தத் தஸ்ய ஸத்ருஶம் பவேத்" [என்னை அழைத்துச்

**ஆரானு மாதானு மல்ல ளவள்காணீர்** 65
**வாரார் வனமுலை வாசவ தத்தையென்று**
**ஆரானுஞ் சொல்லப் படுவா ளவளுந்தன்** 66
**பேராய மெல்லா மொழியப் பெருந்தெருவே**

***அவள் ஆரானும் ஆதானும் அல்லள் காணீர்*** — அவள் ஸாமாந்ய மான ஒருத்தியல்லள்; (அறிவுமிக்கவள்); ***வார் ஆர் வனம் முலை வாசவதத்தை என்று*** — கச்சணிந்த அழகிய முலையையுடைய 'வாசவதத்தை' என்று, ***ஆரானும் சொல்லப்படுவாள்*** — எல்லாரா லும் புகழ்ந்து சொல்லப்பட்டவளானவள்; ***அவளும்*** — அந்த வாஸவதத்தை தானும், ***தன் பேர் ஆயம் எல்லாம் ஒழிய*** — தனது சிறந்த தோழிகளையெல்லாம் விட்டிட்டு, ***பெரு தெருவே*** — பெரியதொரு வழியே,

---

காணவேணுமென்னும் ஆசை கரைபுரண்டிருப்பார்க்கு? ஸ்வரூபஜ்ஞாநத்தால் ஆற்றினருண்டாகில் அவர் ஆசை மட்டமாமித்தனையிறே.

(அதுநிற்க) இது நீ துணிந்தமையித்தனை என்ன வேண்டா. இதுக்கு ஶிஷ்டாசாரமுண்டு என்கை; பழைய ருமாய் விலக்ஷணருமாயிருப்பார் அநுஷ்ட்டித்தார்கள் என்கை. (ஆரானும் ஆதானுமல்லள்) சைதந்யம் குறைந்தவளுமல்லள், அசித்கல்பையுமல்லள். (அவள்

---

செல்வது அவருக்கே தகுந்தது] என்று ஸ்வரூபஜ்ஞானத்தால் சீதா பிராட்டிபோல்வார் பொறுத்திருந்தாரெனில், அவர்களுடைய ஆசை என்னுடையதைவிட மட்டமானதென்றே முடிவுகட்டவேண்டும். நான் செய்வது தவறென்னலாகாது.

(அது நிற்க) "நீ செய்து விட்டதால் தவறாகாது என்று ஸ்தாபிக்கமுடியாது" என்று சொல்லவேண்டா; இதற்கு நல்லோர்களின் ஒழுக்கமும் ப்ரமாணமாக உண்டு: பழையவர்களுமாய், சிறந்தவர்களுமா யிருப்பவர்கள் காதலுக்காகப் பெண்மையை அழித்துக்கொண்டு நடந்துகாட்டியிருக்கிறார்கள். (ஆரானுமாதானுமல்லள்) ஆரானு மல்லள்-அறிவுகுறைந்தவளுமல்லள்; ஆதானுமல்லள்-அசேதனத்தைப் போலே அறிவற்றவளுமல்லள். (அவள் காணீர்) அவள் ஒழுக்கத்தை

காணீர்) அவளைக் கேளுங்கள். (வாரார் வனமுலை) தன்னால் த்₄ரித்துத் தாங்கவொண்ணாத முலை என்று பருவம் மிக்கிருக்கிறபடி சொல்லுகிறது. காந்தன் தாங்குதல், அது பெறாதபோது வாராலே த்₄ரித்தல் செய்யுமித்தனை. (வாசவதத்தையென்று ஆரானுஞ் சொல்லப் படுவாள்) ப்ரஸித்₃தை₄யன்றோ? விலக்ஷணரெல்லாம் கொண்டாடப்பட்டவளன்றோ? ஸ்ரீ ஜனகராஜன் திருமகள் ஓலக்கத்திலும் குறைவற்றாளொருத்தியென்று கொண்டாடப்படுமவளன்றோ? (அவளும்) இத்துணிவு துணிந்தேன் நானேயல்லேன், அவளும் துணிந்தாளெனகை. (தன் பேராயமெல்லாமொழிய) உங்களை இசைவிக்₃கைக்காக இத்தனை வார்த்தை சொன்னேன் நான்; தோழிமாருடைய பெரிய திரளைக் கடுக விட்டுநின்றாளித்தனையன்றோ; நெருப்பில் காலிடவொண்ணாதாற்போலே தோழிமார் திரளில் கால் பொருந்திற்றோ அவளுக்கு? (பெருந்தெருவே) தோழிமாரைவிட்டு ஒரு மூலையிலே இருந்தாளோ? பெருந்தெருவே

---

நான் சொல்லக் கேளுங்கள். (வாரார் வனமுலை) தன்னாலே த்₄ரித்து நின்று தாங்கமுடியாததாய், வாராலே கட்டி வைக்கவேண்டிய முலை என்று பருவம் நிரம்பியிருக்கிறபடியைச் சொல்லுகிறது. நாயகன் தாங்கவேணும்; அது கிடையாதபோது வாராலே கட்டிவைக்கவேணும். (வாசவதத்தை என்று ஆரானும் சொல்லப்படுவாள்) மிகவும் ப்ரஸித்₃தை₄யன்றோ? சிறந்தவர்கள் அனைவராலும் கொண்டாடப்படுமவளன்றோ. ஸ்ரீஜனகராஜன் திருமகள் கோ₃ஷ்டி₂யிலும் குறைவற்றவள் ஒருத்தி என்று கொண்டாடப்படுமவளன்றோ. (அவளும்) இப்படி காதலனை அடைய முறைதவறி முயன்றவன் நான்மட்டுமல்ல; அவளும் இத்துணிவு கொண்டாள் என்கிறாள். (தன் பேராயமெல்லாம் ஒழிய) உங்களை விடத்துணியாமல் உங்களை இசையவைப்பதற்காக இத்தனை வார்த்தைகள் சொன்னேன் நான். காதலனுக்காகத் தன் தோழிகளின் பெரிய குழுவை விரைவிலே விட்டுநின்றாளன்றோ அவள். நெருப்பிலே கால் வைக்க முடியாததுபோலே தோழிமார் குழுவிலே கால் பொருந்தப்பெறாத அவள் என்னிலும் துணிவு மிக்கவளன்றோ. (பெருந்தெருவே) தோழிமாரை விட்டு அரண்மனையில் ஒரு மூலையிலிருந்தாளோ? அஸஹ்யம் பண்ணையான

**தாரார் தடந்தோள் தளைக்காலன் பின்போனாள்** 67
**ஊரா ரிகழ்ந்திடப் பட்டாளே மற்றெனக்கிங்கு**
**ஆரானுங் கற்பிப்பார் நாயகரே நானவனைக்** 68

***தார் ஆர் தட தோள் தளை காலன் பின் போனாள்***—மாலை யணிந்த பெரிய தோள்களையுடையனும் விலங்கிடப்பெற்ற கால்களையுடையனுமான வத்ஸராஜனின் பின்னே புறப்பட்டுப்போனாள்; ***ஊரார் இகழ்ந்திடப்பட்டாளே***—(அவள்) ஊராராலே நிந்திக்கப்பட்டாளோ? (இல்லை). ***இங்கு***—இப்படிப் பட்ட எனது அவஸ்தையிலே, ***எனக்கு***—(இத்துணிவுடைய) எனக்கு, ***மற்று கற்பிப்பார்***—எனது துணிவுக்கு எதிர்த்தட்டான பொறுமையை உபதேசித்தவர்கள், ***ஆரானும்***—ஆராயிருந்தாலும், ***நாயகரே***—அவர்கள் எனக்கு நியாமகராவரோ? (அவர்கள் பேச்சை நான் கணிசிக்க மாட்டேன்), ***நான் அவனை***—நான் அவனுடைய,

---

யன்றோ போனதென்கை. (தாரார் தடந்தோள் தளைக் காலன் பின்போனாள்) விலங்கிட்டிருக்கிற வத்ஸராயன் பின்னே போகிற இவள், தோளும் தோள்மாலையுங்கண்டு அவனை ஆசைப்பட்டுப் போனாற்போலேயன்றோ போனது. (ஊரார் இகழ்ந்திடப்பட்டாளே) அப்படி அவன்பின்னே போனவளை ஊரார் கொண்டாடினவித்தனையல்லது பழி சொன்னாருண்டோ ?

---

**ராஜகுமாரியாயிருந்தும் ராஜவீதியிலன்றோ நடந்து சென்றாள். (தாரார் தடந்தோள் தளைக் காலன் பின்போனாள்) தன் தந்தையாலே விலங்கிடப்பட்டிருக்கிற வத்ஸராஜனாகிற தன் காதலனின் பின்னே போனாள். (தாரார் தடந்தோள் தளைக்காலன்) காலிலேயிருக்கும் விலங்கைக் கணிசியாமல், தோளும் தோள்மாலையுமாய்க் கண்டாற் போலே, அவனை ஆசைப்பட்டன்றோ போனாள். (ஊரார் இகழ்ந்திடப் பட்டாளே) அப்படி அவன்பின்னே போனவளை ஊரார் கொண்டாடினார்களேயொழிய இகழவில்லையே. [இக்கதை பாஸனுடைய நாடகமொன்றிலும், ப்ருஹத்கதை முதலான பழைய நூல்களையும், வரலாறுகளையும் மூலமாகக்கொண்ட கதாஸரித்ஸாகரத்தில் பனிரண்டாவது தரங்கத்திலும் விவரிக்கப்பட்டுள்ளது ]**

(மற்றெனக்கிங்காரானும் கற்பிப்பார் நாயகரே) இத்துணிவுக்குப் புறம்பான வார்த்தை சொல்லிக் கற்பிப்பார் எனக்கு நாயகரல்லர். "பயிலுந் திருவுடையார் யவரேலு மவர்கண்டீர் பயிலும் பிறப்பிடைதோறு எம்மையாளும் பரமர்" என்றிருக்கும் நிலை தவிர்ந்தேன். இத்துணிவுக்கு உடன் பட்டார் எனக்கு நாயகர்; 'க்ரமப்ராப்தி பொறுக்க வேணும்' என்றிருப்பார் எனக்கு நாயகரல்லர். "அன்னையென் செய்யிலென் ஊரென் சொல்லிலென்?"

(நான்) இத்துணிவுக்குப் புறம்பானரெல்லாரையும் விட்டிருக்கிற நான். (அவனை) ஸ்வவ்யதிரிக்தரெல்லாரையும் விடுவித்தவனை. (நானவனை) பந்தடிக்கவென்று புறப்பட்ட நான் குடக்கூத்தாடப் புறப்பட்டவனை என்றுமாம். வழி பறிக்கப் புறப்பட்டு வழிபறியுண்டேனென்றபடி.

---

**(மற்றெனக்கிங்கு ஆரானும் கற்பிப்பார் நாயகரே) இத்துணிவுக்கு மாறுபட்ட வார்த்தை சொல்லி என்னைத்திருத்த நினைப்பார் என் தலைவரல்லர். "பயிலும் திருவுடையார் யவரேலும் அவர் கண்டீர் பயிலும் பிறப்பிடை தோறு எம்மையாளும் பரமரே" [திருவாய் 3-7-1] என்றும், "தாள்தொழுவார் காண்மின் என் தலை மேலாரே" [பெரியதிரு 7-4-1] என்றுமிருக்கும் நிலை தவிர்ந்தேன். இத்துணிவுக்கு ஒப்பினர் என் தலைவர். "காலக்ரமத்தில் அவனை அடையலாம்; அதுவரை பொறு" என்பார் என் நாயகரல்லர்; எனக்கு வேண்டாதாரே. "அன்னையென் செய்யிலென் ஊரென் சொல்லிலென்" [திருவாய் 5-3-6] என்ற பராங்குசநாயகியின் நிலை போன்றது இப்பரகாலநாயகியின் இந்நிலையும்.**

**(நான்) இத்துணிவை ஆமோதிக்காதவர்கள் அனைவரையும் விட்டொழித்திருக்கும் நான்; (அவனை) தன்னைத் தவிர்ந்த அனைவரையும் விடும்படி செய்த அவனை. (நானவனை) பந்தடிக்க என்று புறப்பட்ட நான், குடக்கூத்தாடப் புறப்பட்ட அவனை என்றும் கொள்ளலாம்; என் அழகாலே அவனைக் கொள்ளைகொள்ளப்புறப்பட்டு, என் உள்ளத்தை அக்குடக்கூத்தனுக்குக் கொள்ளை கொடுத்தேன் என்று கருத்து.**

**காரார் திருமேனி காணு மளவும்போய்ச்**
**சீரார் திருவேங் கடமே திருக்கோவல்** 69

***கார் ஆர் திருமேனி காணும் அளவும் போய்***—காளமேகத் திருவுருவைக் கண்டு களிக்கும் வரையில் ஊரூராகப்போய், ***சீர் ஆர் திருவேங்கடமே......வடமதுரை***—சீர்மைமிக்க திருவேங் கடமலை, திருக்கோவலூர்,

---

(காரார் திருமேனி காணுமளவும்போய்) காரார் திரு மேனி கண்டதுவே காரணமாகவிறே அடியிலே இப்படிப் பட்டது. இத்துணிவு எவ்வளவும் செல்லக்கடவதென்னில்: காரார்திருமேனி கண்டதுவே காரணமாகப் பிறந்த துணிவு காரார்திருமேனி காணுமளவும் செல்லக்கடவதிறே. இவ ளுடைய உத்₃யோக₃த்தைக்கண்ட தோழி "அவனோடு ஸம்ஶ்லேஷிக்கக்கடவை" என்ன, பண்டும் கண்டமாத்ரத் திலேயாயிற்று இப்பாடுபட்டது. இப்போதும் கண்டு விடுமித்தனை.

நீ காணும்படி என்னென்னில்: (சீரார் திருவேங்கடமே) அவன் கு₃ணங்கள் கொண்டாடியிருக்கும் தே₃ஶமெங்கும் புக்கு என்வடிவைக்காட்டி அவன் கு₃ணத்தையழித்துப்

---

**(காரார் திருமேனி காணுமளவும் போய்) முதலில் காரார் திருமேனி கண்டதுவே காரணமாகவன்றோ இவள் இப்பாடுபட்டது: மட லெடுக்கப்புறப்பட்ட உன் துணிவு எதுவரையில் நிலைத்துநிற்கும் எனில்: காரார் திருமேனி கண்டதுவே காரணமாகப் பிறந்த துணிவு காரார் திருமேனி காணுமளவும் செல்லுவதே பொருத்தமுடைத் தன்றோ என்கிறாள், அன்றிக்கே, இவளுடைய இம்முயற்சியைக் கண்ட தோழி "நீ அவனோடு கூடக்கடவாய்" என்று நல்வார்த்தை சொல்ல, "அவனோடு கூடவேண்டுமென்னும் அவசியமுமில்லை; முன்பும் அவனைக் கண்டவுடன்தான் இப்பாடுபட்டது. இப்போதும் கண்டுவிட்டால் போதுமானது" என்கிறாளாகவுமாம்.**

***நீ காணும் வழியென்ன? எனில்; (சீரார் திருவேங்கடமே.....)*** **அவன் ஒவ்வொரு கு₃ணத்தை வெளிப்படுத்தியிருக்குமிடமாகப் பறை சாற்றிக்கொண்டிருக்கும் ஊரெல்லாம் புகுந்து, விரஹம்தின்ற என்**

பெறக்கடவேன். (சீரார் திருவேங்கடமே) நித்யஸூரிகளுக்கும் ஸம்ஸாரிகளுக்கும் ஒக்க முகங்கொடுத்துக் கொண்டு நிற்கிற நிலையாயுள்ள ஏற்றமுண்டிறே திருமலைக்கு; அங்கே சென்று என் வடிவைக்காட்டி அவன் உபயவிபூதிக்கு ஆளாகாதபடி பண்ணுகிறேன்.

(திருக்கோவலூரே) "ஆஶ்ரிதர் இரண்டு மூன்றுபேர் நின்ற மண்" என்று அம்மண்ணையுகந்து "வாசல் கடைகழியா உட்புகா காமர் பூங்கோவலிடைகழியே பற்றி" என்று நிற்கிறுனுகை ப்ரஸித்தமிறே. அங்கே சென்று "அவன் ஆஶ்ரிதையான என்னைக் கைவிட்டபடி பாருங்கோள்" என்று என்வடிவைக் காட்டுகிறேன்.

---

உடம்பைக் காட்டி அவன் குணத்தை அழிப்பதன்மூலம் அவனைக் கதறியோடிவரச் செய்து—காட்சியைப் பெறுவேன். இனி, அவன் குணக்கொடிநாட்டியிருக்கும் சில முக்கியமான ஊர்களைப் பேசுகிருள்,—(சீரார் திருவேங்கடமே) சீர்மைமிக்க திருவேங்கடம்; "மந்திபாய் வடவேங்கட மாமலை வானவர்கள் சந்திசெய்ய நின்றுன்" [அமலனுதி 3] கண்ணுவான் என்றும் மண்ணேர் விண்ணேர்க்குத் தண்ணுர் வேங்கட விண்ணேர் வெற்பனே" [திருவாய் 1-8-3] "தண்ணருவி வேங்கடமே வானேர்க்கும் மண்ணேர்க்கும் வைப்பு" [நான்-திருவ 45] என்கிறபடியே நித்யஸூரிகளுக்கும், நித்ய ஸம்ஸாரிகளுக்கும் ஒரு சீராக முகங்காட்டி நிற்கிற ஏற்றம் உண்டன்றே திருமலைக்கு. அங்கே சென்று, இவன் எனக்கு முகங்காட்டின அழகைப் பார்த்தீர்களா என்று கூவிச்செல்வதன்மூலம் இவன் உபயவிபூதிக்கும் நாயகனுகாதபடி பண்ணுகிறேன்.

(திருக்கோவலூரே) "முதலாழ்வார்களில் முதலில் ஒருவர் கிடந்து, பிறகு இருவரிருந்து, பின்னர் மூவர் நின்ற இடம்" என்னும் காரணத்தாலே அம்மண்ணை உகந்து,

"நீயும் திருமகளும் நின்ருயால் குன்றெடுத்துப்
பாயும் பனிமறைத்த பண்பாளா—வாசல்
கடைகழியா உட்புகா காமர் பூங்கோவல்
இடைகழியே பற்றி யினி" [முதல்திருவ 86]

என்கிறபடியே அம்மண்ணின் மணத்தை முகர்ந்துகொண்டு இன்னும் எழுந்தருளியிருக்கிறுனுகை ப்ரஸித்தமன்ரே. அங்கே சென்று

**ஊரே மதிட்கச்சி யூரகமே பேரகமே**
**பேரா மருதிறுத்தான் வெள்ளறையே வெஃகாவே 70**

மதிள் சூழ்ந்த காஞ்சி நகரத்திலுள்ள ஊரகம், அப்பக்குடத் தான் ஸந்நிதி, சலியாமற் கிடந்த மருத மரங்களை முறித்த கண்ணன் எழுந்தருளியிருக்கிற திருவெள்ளறை, திருவெஃகா.

---

(மதிள்கச்சி ஊரகமே) உள்ளுக்கிடக்கிற வஸ்துவின் சீர்மைக்குப் போரும்படியாக மதிளையுடைய திருக்கச்சியில் திருவூரகத்திலே எல்லாரோடும் வரையாதே பொருந்தும் ஸ்வபாவனென்று தெரியும்படி திருவுலகளந்தருளின வ்யாஜத்தை ப்ரகாசிப்பித்து நிற்கிருனிறே; அங்கே சென்று என் வடிவைக்காட்டி, "என்னை வரைந்தபடி பாருங்கோள்" என்கிறேன்.

(பேரகமே) மதிளுமின்றியே ஆற்றங்கரையிலே திருப்பேரிலே வழிப்போவாரும் தன்னைக்காணும்படி திறந்த வாசலாத் தன்னை ஸர்வஸ்வதாநம்பண்ணிக் கிடக்கிரு

---

'அவன் அடிச்சியான என்னைக் கைவிட்டபடியைப் பாருங்கோள்' என்று என் வடிவைக் காட்டுகிறேன்.

(மதிள் கச்சி ஊரகமே) உள்ளேயிருக்கும பரம்பொருளின் பெருமைக்குத் தக்கபடியான திண்மைமிக்க மதிளையுடைய திருக்கச்சியில் திருவூரகத்தில் திரிவிக்கிரமவுருவோடு விளங்குகையாலே, திருவுலகளந்தருளுவது என்னும் வியாஜத்தாலே, வஸிஷ்ட சண்டாள விபாகமற அனைவரையும் ஒரு வரம்பில்லாமல் உடைமைப்பொருள்கள் என்னும் காரணத்தாலேயே, பெற்றதாய் குழந்தையைத் தடவிக்கொடுப்பதுபோலே திருவடியாலே தடவிக்கொடுத்து நின்ற நீர்மையை வெளியிட்டு நிற்கிருனன்றே. அங்கே சென்று என் உடம்பைக்காட்டி ''என்னை மாத்திரம் தொடுவதில்லை என்று வரம்பு கட்டிக்கொண்டிருப்பதைப் பாருங்கோள்'' என்கிறேன்.

(பேரகமே) அங்கேயாவது மதிளாகிற வரம்புண்டு; அப்படி ஒரு மதிளுமில்லாமல் இரண்டாற்றுக்கு நடுவிலே திருப்பேர் நகரிலே வழிப்போக்கர்களும் தன்னைக் காணும்படி திறந்த வாசலாய்த் தன்னையும் தனதையும் நமக்குக் கொடுத்துக்கிடக்கிருன் என்று ப்ரஸித்த

னென்று ப்ரஸித்₃த₄மிறே. அங்கே சென்று என வடிவைக் காட்டி "அவன் ஸர்வஸ்வதா₃நம் பண்ணுகிறபடி பாருங் கோள்" என்கிறேன்.

(பேரா மருதிறுத்தான் வெள்ளறையே) பேராமருது என்றது அஸுராவேஶத்தாலே பேராதே நின்றதென்னு தல், தளர்நடையிட மருதிறுத்தானென்னுதல். ஸ்தா₂ வரங்களிலுமகப்பட அஸுராவேஶமுண்டாயிராநின்றது; அஸுராவேஶமில்லாதபடி பரிவருள்ள திருவெள்ளறை யிலே நின்றருளுயிருக்கிறானிறே. அங்கே சென்று என் வடிவைக் காட்டி "பரிவையான எனக்கு முகந்தந்தபடி பாருங்கோள்" என்கிறேன்.

---

மன்றோ. அங்கே சென்று என் உடம்பைக்காட்டி "அவன் அனைத்தை யும் அடியார்க்கு அளித்திருக்கும்படியைப் பாருங்கோள்" என்கிறேன்.

(பேரா மருதிறுத்தான் வெள்ளறையே) 'பேராமருது' என்று மருதுக்கு விசேஷணமாகக்கொண்டு அஸுராவேஶத்தாலே பேரா மல் நின்ற மருது என்று பொருளுரைக்கலாம்; "பொய்ம்மாய மருதான அசுரரைப் பொன்றுவித்து" என்றார் பெரியாழ்வாரும்; அல்லது, 'பேரா' என்றது 'பேர்ந்து' என்றதாய், தளர்நடையிட்டுச்சென்று மருதமரங்களை முறித்தான் என்பதாகவும் கொள்ளலாம். 'மருதிறுத் தான் வெள்ளறையே' என்றதால் முளைக்கும் பூண்டுகளெல்லாம் அஸுராவேஶமுள்ள திருவாய்ப்பாடியிலிருந்த குறைதீர, "சதுரர்கள் வெள்ளறை நின்றாய்! அந்தியம் போதிதுவாகும் அழகனே! காப்பிட வாராய்" என்னும் பெரியாழ்வார் வழிவந்த பரிவுடையோர்கள் வாழும் திருவெள்ளறையில் அவர்களுக்கு முகங்கொடுத்து நிற்கிறானன்றோ; அங்கே சென்று என் வடிவைக்காட்டி 'பரிவையான எனக்கு முகங் கொடுத்தபடியைப் பாருங்கள்' என்று பறைசாற்றுகிறேன். (வெஃகாவே) திருமழிசையாழ்வார்,

"கணிகண்ணன் போகின்றான் காமருபூங்கச்சி
மணிவண்ணா நீ கிடக்க வேண்டா—துணிவுடைய
செந்நாப்புலவனும் யான் போகின்றேன் நீயும் உன்
பைந்நாகப் பாய் சுருட்டிக்கொள்"

என்றவுடன் படுக்கையைச் சுருட்டிக்கொண்டு போய்

**பேராலி தண்கால் நறையூர் திருப்புலியூர்**

பெயர்பெற்ற திருவாலி நகர், திருத்தண்கால், திருநறையூர், குட்டநாட்டுத் திருப்புலியூர்,

---

(வெஃகாவே) ஆஶ்ரிதன் "போ" என்ன, படுக்கை சுருட்டிக்கொண்டு அவன்பின்னே போய், "கிட" என்ன, காற்கடை தலைமாடாகக் கிடந்தானாக 'ஆஶ்ரிதன் சொன்ன படி செய்தான்' என்று ப்ரஸித்₃த₄மிறே; நான் சொன்ன படி செய்தானாகவில்லையே என்று என் வடிவைக் காட்டு கிறேன்.

(பேராலி) பிறந்த ஊருமாய்த் திருப்பதியுமாய் எனக் குத் தன்னை முற்றூட்டாக்குகிறானென்றிறே (நாட்டிலே) ப்ரஸித்₃தி₄; அங்கே சென்று எனக்கு முற்றூட்டாக இவன் உடம்பு கொடுத்தபடி என்னுடம்பிலே பாருங்கோள் என் கிறேன். "ஏன்றான்? இவன் திருவாலியிலேயன்றோ இருக் கிறது. திருவாலியிலேசென்று பழியிடுவேனென்னுமது

---

"கணிகண்ணன் போக்கொழிந்தான் காமருபூங்கச்சி
மணிவண்ணா நீ கிடக்கவேண்டும்—துணிவுடைய
செந்நாப்புலவனும் யான் போக்கொழிந்தேன் நீயும் உன்
பைந்நாகப் பாய் விரித்துக்கொள்"

என்றவுடன் முன்பிருந்த கால்மாடு தலைமாடாம்படி கிடந்து, 'அடியார் சொன்ன வண்ணம் செய்தான்' என்று பெயர்பெற்றுக் கிடக் கிறானன்றோ; அங்கு சென்று, 'நான் சொன்னவண்ணம் செய்தானா பாருங்கள்' என்று கூறி என் வடிவைக்காட்டி அவன் பெயரை அழிக்கிறேன்.

(பேராலி) பிரஸித்₃தி₄பெற்ற திருவாலி; நான் பிறந்த ஊருமாய், தி₃வ்ய தே₃ஶமுமாய் எனக்குத் தன்னை முழுஉணவாகக் கொடுக்கிறான் என்றன்றோ உலகத்தில் பிரஸித்₃தி₄. அங்கே சென்று "எனக்கு முழு உணவாக இவன் தன்னுடம்பைக் கொடுத்த அழகை என்னுடம்பிலே பாருங்கள்; என்னை எவ்வளவு நாளாகப் பட்டினி போட்டிருக்கிறான் என்று காணுங்கள்" என்கிறேன். "இவன் திருவாலியிலேயன்றோ இருக்கிறது. 'திருவாலியிலே சென்று தூற்றுவேன்' என்பது

கூடாதே" என்னில், அதுவும் அஸத்கல்பமாய்க் கிடக்கிறதுகாணும் இவளுக்கு.

(தண்காால்) குளிர்ந்த காற்றுப்போலே ஆஶ்ரிதருடைய ஶ்ரமம் தீர உதவும் ஸ்வபாவனென்றிறே "தண்கால்" என்று பேராயிற்று; அங்கே சென்று, என் ஶ்ரமம் தீர உதவினபடி பாருங்கோள் என்று என் வடிவைக்காட்டுகிறேன்.

(நறையூர்) தன் ஸ்வாதந்த்ர்யமெல்லாம் செல்லாமே பிராட்டி ஸ்வாதந்த்ர்யமேயாக எண்ணி அவளுக்கு பவ்யனையிருக்கிறானென்று ப்ரஸித்தமிறே. அங்கே சென்று, இவன் பிராட்டிக்கு பவ்யனானபடி என் வடிவிலே பார்த்துக் கொள்ளுங்கோள் என்கிறேன்.

(திருப்புலியூர்) *மெல்லிலைச் செல்வ வண்கொடிப் புல்க வீங்கிளந்தாள் கமுகிறே. அவன் நின்ற ஊரில் ஸ்தாவரங்களுமுட்பட பரஸ்பரம் மிதுநமாய்ச் சேர்ந்து

---

பொருந்துமோ?" என்னில்: அத்திருப்பதி அருகிலிருந்தும் இல்லாததாகவே தோற்றுகிறபடியால் அருகிலிருக்கிறது என்னும் நினைவில்லை இவளுக்கு.

(தண்கால்) குளிர்ந்த காற்றுப்போலே அடியாருடைய சிரமங்களைத் தீர்க்கும் தன்மையை உடையவன் என்றன்றோ 'தண்கால்' என்று பெயராயிற்று. அத்திருப்பதிக்குச்சென்று "என் துன்பம்தீர உதவின அழகைக் கண்படைத்தவர்களெல்லாம் காணுங்கள்" என்று என்வடிவைக் காட்டுகிறேன்.

(நறையூர்) தன் ஸ்வாதந்திரியம் ஒன்றும் விலைசெல்லாமல் பிராட்டிக்கே ப்ராதந்யம் கொடுத்து அவளுக்கு அடங்கி நடக்கிறான் என்று பிரஸித்தமன்றோ. அங்கே சென்று, "இவன் அவளுக்கு அடங்கிநடக்கும் வைபவத்தை அவளுடையவனான என்வடிவிலே பார்த்துக்கொள்ளுங்கள்" என்கிறேன்.

(திருப்புலியூர்) "மெல்லிலைச் செல்வ வண்கொடிப்புல்க வீங்கி ளந்தாள் கமுகின்" [திருவாய் 8-9-7] என்கிறபடியே அவன் நிற்கிற ஊரில், கூட நிற்கும் தாவரங்களும், ஆணும் பெண்ணும் [illegible]

**ஆராமஞ் சூழ்ந்த வரங்கங் கணமங்கை** 71

அழகிய தோட்டங்கள் சூழ்ந்த திருவரங்கம்; திருக்கண்ண மங்கை,

---

வர்த்திக்குமென்றிறே ப்ரஸித்₃தி₄; அங்கே சென்று என்னோடு சேர்ந்தபடி பாருங்கோள் என்கிறேன்.

(ஆராமம் சூழ்ந்தவரங்கம்) உகந்தருளின தே₃ஶங்களெல்லாம் பகலிருக்கையாய் ஆஶ்ரிதரக்ஷணத்துக்கு ஏகாந்தஸ்த₂லமென்று கோயிலிலே நித்யவாஸம் பண்ணு

---

**வாழும் என்றன்றோ பிரஸித்₃தி₄; அங்கே சென்று 'தான் நாயகனோடு சேர்ந்திருக்கும் அழகைப் பாருங்கள்' என்கிறேன்.**

**(ஆராமம் சூழ்ந்த அரங்கம்) தோட்டங்களால் சூழப்பெற்ற அரங்கம்; இங்கு "ஆராமம்" [தோட்டம்-நந்தவனம்] என்றது மற்ற தி₃வ்ய தே₃ஶங்களை; மற்ற தி₃வ்யதே₃ஶங்களால் சூழப் பெற்ற அரங்கம் என்றபடி. ஸ்ரீரங்க₃ஸார்வபௌ₄மனுக்குத் திருவரங்கம் அடியாரை அளிப்பதற்குரிய நித்யவாஸஸ்த₂ானமாகவும், மற்றைத் திருப்பதிகள் ஆங்காங்கு வேட்டைக்குச் செல்லும்போது பகலிலே தங்கும் தோட்டங்களாகவுமிருப்பதாக ஆழ்வார்களின் திருவுள்ளம். ராஜாக்கள் ஆங்காங்கு வேட்டைக்குச் செல்லும்போது பகலிருக்கை எனப்படும் சில தங்குமிடங்களிலே தங்கி இளைப்பாறி இரவில் அரண்மனைக்கு வந்து சேருவார்களன்றோ. அதுபோலே என்று கொள்க, திருவாய் மொழி வெள்ளைச்சுரிசங்கு (7—3) இருபத்து நாலாயிரப்படி ப்ரவேஶத்தில்—**

"நாயகன் ம்ருக₃யாதி₃ வ்யாஜத்தாலே தென்திருப்பேரையிலே இருந்தான்; நானும் அங்கே புக்கல்லது த₄ரியேன் என்ன" என்று தொடங்கி, "'ஆராமம் சூழ்ந்த அரங்கம்' என்று திருப்பதிகள் பெருமாளுக்குப் பகலிருக்கையாகையாலே, 'தென் திருப்பேரையிலே போனான்' என்று அங்கே போகத்தேடுகிறாள்"

**என்றுள்ள ஸ்ரீஸூக்திகள் இவ்விஷயத்தைத் தெளிவுபடுத்தும். திருவரங்கத்திலிருந்துகொண்டே பரமபுருஷன் உப₄யவிபூ₄தியையும் ரக்ஷிக்கிறான் என்பதை,**

கிருனுயிருக்கிறது; "வன்பெரு வானகமுய்ய" இத்யாதிகளிற் சொல்லுகிறபடியே; அங்கே சென்று என் வடிவைக் காட்டி என்னுடைய ரக்ஷணம் பண்ணினபடி பாருங்கோள் என்கிறேன்.

(கணமங்கை) "கண்களாரளவும் நின்று கண்டு கொண்டேன்" என்று நான் சொன்னேனிறே; அங்ஙன் சொன்னது அவனைப் பேணினேனத்தனை; நான் கண்ணாரக் கண்டேனோ? இல்லையோ? என்று என் வடிவைக் காட்டுகிறேன்.

---

"வன்பெரு வானகமுய்ய அமரருய்ய
மண்ணுய்ய மண்ணுலகில் மனிசருய்ய
துன்பமிகு துயரகல அயர்வொன்றில்லாச்
சுகம்வளர அகமகிழும் தொண்டர்வாழ
அன்பொடு தென்திசைநோக்கிப் பள்ளிகொள்ளும்
அணியரங்கன் திருமுற்றத்து" [பெரு-திரு 1-10]

என்று குலசேகரப்பெருமாள் அருளிச்செய்தாரன்றோ. அவன் செங்கோல் செலுத்தும் அவ்விடத்திலே சென்று என் வடிவைக்காட்டி 'இதுவோ என்னை ரக்ஷிக்கும் அழகு? "அருளார் திருச்சக்கரத்தால் அகல்விசும்பும் நிலனும் இருளார் வினைகெடச் செங்கோல் நடாவுதிர், ஈங்கோர் பெண்பால் பொருளோ எனும் இகழ்வோ? இவற்றின் புறத்தாள் என்றெண்ணோ? தெருளோம் அரவணையீர்' [திருவிருத்தம் 33]" என்று அனைவருமறியக் கதறுகிறேன்.

(கணமங்கை) "கண்களாரளவும் நின்று கண்ணமங்கையுள் கண்டு கொண்டேனே" [பெரிய திருமொழி 7-10-9] என்று நான் சொன்னேனன்றோ; அப்படிச் சொன்னது அவனைக் கண்ணாரக் காண ஆசையைத் தெரிவித்துக்கொண்டதித்தனை; 'இப்படி ஆசைப்பட்ட நான் கண்ணாரக் கண்டேனா இல்லையா என்பதை என் வடிவிலே பார்த்துக்கொள்ளுங்கள்' என்று அவ்வூராரிடம் சென்று என் வடிவைக் காட்டுகிறேன்.

(காரார் மணிநிறக் கண்ணனூர் விண்ணகரம்) நிறைவுடையார் நிறைந்த பரமபதத்தை விட்டுக் குறைவுடையார் கூடியிருக்குமிடத்

**காரார் மணிநிறக் கண்ணனூர் விண்ணகரம்**
**சீரார் கணபுரஞ் சேறை திருவழுந்தூர் 72**
**காரார் குடந்தை கடிகை கடல்மல்லை**

நீலமணி வண்ணனுன கண்ணபிரானது திவ்ய தேசமாகிய திருவிண்ணகர், சீர்மைபெற்ற திருக்கண்ணபுரம், திருச்சேறை, தேரழுந்தூர், நீர் நிறைந்த திருக்குடந்தை, கடிகைத் தடங் குன்று (அதாவது—சோளஸிம்ஹபுரம்), திருக்கடல்மல்லை,

---

(காரார்மணிநிறக் கண்ணனூர் விண்ணகரம்) பரம பதத்தை விட்டுக் குறைவாளர்க்கு முகங்கொடுக்கத் திரு விண்ணகரிலே வந்தான். "தன்னொப்பாரில்லப்பன் தந் தனன் தனதாள் நிழல்" என்று ப்ரஸித்தமிறே; குறை வாட்டியாயிருக்கிற எனக்கு முகம் தந்தானே? இல்லையோ? என்று என் வடிவைக் காட்டுகிறேன்.

(சீரார் கணபுரம்) "கண்ணபுர மொன்றுடையானுக்கு அடியேன் ஒருவர்க்குரியேனே" என்று நான் தனக்கு அநந்யார்ஹையாகத் தாலிகட்டியிருக்க, அங்கே சென்று "என்னைத் தனக்குப் புறம்பாக்கினபடி பாருங்கோள்" என்று என் வடிவைக் காட்டுகிறேன்.

---

தில் அவர்களுக்கு முகங்கொடுக்கத் திருவிண்ணகர்க்கு வந்து அத் தாலே நிறம்பெற்று நிற்பவனாகப் பெயர்பெற்றிருப்பவன். "தன் னொப்பாரில்லப்பன் தந்தனன் தனதாள் நிழலே" [திருவாய் 9-3-9] என்று நம்மாழ்வாரும் அருளினரன்றோ; 'குறைவுடையானான எனக்கு முகங்கொடுத்தானே, இல்லையோ கண்டு கொள்ளுங்கள்' என்று என்வடிவைக் காட்டுகிறேன்.

(சீரார் கணபுரம்) பரகால நாயகிக்குப் புக்ககமாயிருக்கும் சீர்மைமிக்க கண்ணபுரம். "கண்ணபுரமொன்றுடையானுக்கடியேன் ஒருவர்க்குரியேனே?" [பெரிய திரு 8-9-3] என்று "நான் அவனுக்கே உரியவளாகத் தாலிகட்டியிருக்க, என்னைத் தவிக்க விட்டபடியைப் பாருங்கோள்" என்று அங்கே சென்று என்னுடம் பைக் காட்டுகிறேன்.

(சேறை) "மண்சேர முலையுண்ட மாமதலாய்" என்று தாய் முலைக்கும் வேற்றுமுலைக்கும் வாசியறியாத முக்₃த னென்று ப்ரஸித்₃த₄மிறே; அங்கே சென்று என்வடிவை யும் முலையையும் காட்டி என்னை ஸ்பர்ஶித்தானோ? இல்லையோ? என்கிறேன்.

(திருவழுந்தூர்) திருவாய்ப்பாடியில் ஆஶ்ரிதர் கரஸ்பர் ஶம்பட்ட த்₃ரவ்யத்தாலல்லது தனக்குச் செல்லாது என்னுமிடம் ப்ரகாஶிக்க நிற்கிறவிடமிறே; அங்கேசென்று₄ ஆஶ்ரிதஸ்பர்ஶமே இவனுக்கு தா₄ரகமாயிருக்கிறபடி பார்க்கலாகாதோ என்று என் வடிவைக் காட்டுகிறேன்.

(காரார் குடந்தை) ஶ்ரமஹரமான திருக்குடந்தை யிலே "குடந்தையெங் கோவலன்" என்று ஆஶ்ரித ப₄வ்யனான க்ருஷ்ணன் வந்து கண்வளர்ந்தருளுகிறா னென்று ப்ரஸித்₃த₄மிறே; அங்கே சென்று என் வடிவைக் காட்டி, இவன் ஆஶ்ரிதப₄வ்யனோ? அப₄வ்யனோ? என்னு மிடம் ஸாதி₄க்கிறேன்.

---

(சேறை) "கண்சோர வெங்குருதி வந்திழிய வெந்தழல்போல் கூந்தலாளை, மண்சேர முலையுண்ட மாமதலாய்" [பெரிய திருமொழி 7-9-1] என்று தாய்முலைக்கும் மற்றுள்ளவர் முலைக்கும் வித்தியாசம் தெரியாத கைக்குழந்தை என்று பிரஸித்₃த₄மன்றோ. அங்கே சென்று என் வடிவையும் முலையையும் காட்டி, 'என் முலை விஷயத்தில் இவன் பக்ஷபாதங்காட்டினபடியைக் காணீர்' என்கிறேன்.

(திருவழுந்தூர்) திருவாய்ப்பாடியில் அடியார் கைதொட்ட வெண்ணெ கிடையாவிடில் தனக்கு உயிர்த₄ரியாது என்னும் நிலை வெளிப்படும்படி ஆமருவியப்பனாய் நிற்கிற இடமன்றோ. அங்கே சென்று அடிச்சியான என் ஸ்பரிசம் இவனுக்கு த₄ாரகமாயிருக்கிற அழகை என் உடம்பிலே பார்க்கலாகாதோ என்று என் மெலிந்த வுடலைக் காட்டுகிறேன்.

(காரார் குடந்தை) களைப்பாற்றும் குடந்தைநகரிலே "குடந்தை எம் கோவலன்" [திருவாய் 10-9-7] என்று அடியார்க்கடியனான கண்ணன் வந்து கண்வளர்கின்றான் என்று பிரஸித்₃த₄மன்றோ. அங்கே சென்று என்வடிவைக் காட்டி, 'இவன் அடியார்க்கு அடியனோ கொடியனோ?' என்னும் விஷயத்தை நிரூபிக்கிறேன்.

ஏரார் பொழில்சூ ழிடவெந்தை நீர்மலை 73
சீராரும் மாலிருஞ் சோலை திருமோகூர்

அழகிய சோலைகள் சூழ்ந்த திருவிடவெந்தை, திருநீர்மலை, அழகிய திருமாலிருஞ்சோலை, திருமோகூர்,

---

(கடிகை) "கடிகைத் தடங்குன்றின் மிசையிருந்த அக்காரக்கனி" என்று ப்ரஸித்₃த₄மிறே; அங்கே சென்று தன்னுடைய ரஸ்யதை ஆர்க்குக் கண்டது? என்கிறேன்.

(கடல்மல்லை) திருக்கடல்மல்லையில் திருவநந்தாழ்வானையும் விட்டு ஆஶ்ரிதனுக்காகத் தரைக்கிடை கிடக்கிறுனயிறே கிடக்கிறது; அங்கேசென்று, 'இவனோ நானோ தரைக்கிடை கிடக்கிறார்?' என்று என் வடிவைக் காட்டுகிறேன்.

(ஏரார் பொழில்சூழ் இடவெந்தை) ஜாத்யுசிதமான செருக்குக்குப் போக்குவீடாகச் சோலைகளையுடைத்தான திருவிடவெந்தையிலே ஸ்ரீ பூ₄மிப்பிராட்டி பக்கல் தனக்குண்டான வ்யாமோஹம் "பார்வண்ண மடமங்கை பத்தர்"

---

(கடிகை) "கடிகைத் தடங்குன்றின் மிசையிருந்த அக்காரக்கனி" [பெரியதிரு 8-9.4] என்று கற்கண்டு பழுத்துக்கனிந்ததுபோலே இனியனென்று ஸுப்ரஸித்₃த₄மன்றோ. அங்கே சென்று தன் இனிமையை இவன் சுமந்து நிற்பது யாருக்காக? தானே அனுப₄விக்கவோ? "ப₄க்தாநாம்" [ஜிதந்தே] [ப₄க்தர்களுக்காக] என்பது பொய்யோ? என்று கேட்கிறேன்,

(கடல்மல்லை) திருக்கடல்மல்லையிலே திருவநந்தாழ்வானையும் விட்டு, புண்ட₃ரீகன் என்னும் அடியான் ஒருவனுக்காகத் தரையிலே கிடக்கிறான் என்று பெயர் பெற்றிருக்கிறானன்றோ. அங்கேசென்று, 'என்னைப் பெற இவன் தரையிலே கிடக்கிறானோ, இவனைப்பெற நான் தரையிலே கிடக்கிறேனோ என்பதை இருவர் வடிவிலேயும் பார்த்துக் கொள்ளுங்கோள்' என்று என் வடிவைக் காட்டுகிறேன்.

(ஏரார் பொழில் சூழ் இடவெந்தை) காட்டுப்பன்றியாகையாலே சாதிக்குரிய செருக்குக்குப் போக்குவிடத்தகுந்த நந்தவனங்களையுடையதான திருவிடவெந்தையிலே ஸ்ரீ பூ₄மிப்பிராட்டியிடம் தனக்குண்டான மயக்கம் "பார்வண்ண மடமங்கை பத்தர்" [திருநெடு 18]

என்னும்படி வடிவிலே தோற்ற நிற்கிறானிறே; அந்த:புர பரிகரமான என்னைப் படுத்தின பாட்டைக்காட்டி, அவளுக்கு வ்யாமுக்₃த₄னானபடி இதுவோ? என்று தன் வ்யாமோஹத்தையெல்லாம் நிலைநிறுத்துகிறேன்.

(நீர்மலை) "நீர்வண்ணன் நீர்மலைக்கே போவேன்" என்னும்படி அடக்கம் குடிபோனார்க்கு க்லேஶந்தீரும்படி ஒதுங்க நிழலாயிருக்கும் திருநீர்மலையென்றிறே ப்ரஸித்₃தி₄: அடக்கம் குடிபோன எனக்கு அத்தே₃ஶத்திலே புக வொண்ணாதபடி இருக்கிறபடியை என்வடிவில் பாருங்கோள் என்கிறேன்.

(சீராரும் மாலிருஞ்சோலை) ஆர்யர்கள் இகழ்ந்த தெற்குத் திக்கிலே அங்குத்தை ஸ்த₂ாவரங்களோடும் தன்னோடும் வாசியற நின்று ம்லேச்சர்க்ககப்பட முகங்கொடுக்கும்

---

என்னும்படி தன் வடிவிலே தோற்ற நிற்கிறானன்றோ. அங்கே சென்று பிராட்டியின் அடிமையான என்னைப் படுத்தின பாட்டைக் காட்டி. "அவன்பால் இவன் காட்டும் அன்பு உண்மையோ, வெளிவேஷமோ, காணீர்" என்று அவன் அன்பை அளந்து காட்டி விடுகிறேன்.

(நீர்மலை) "நீர்வண்ணன் நீர்மலைக்கே போவேன்" [திருநெடு 18] என்னும்படி அவனைப் பெறவிரும்பி அடக்கமிழந்தார்க்குத் துன்பம் தீரும்படி ஒதுங்க நிழலாயிருக்கும், திருநீர்மலையெனும் தி₃வ்ய தே₃ஶம் என்றன்றோ பிரஸித்₃தி₄. அடக்கம் நீங்கி மடலெடுக்கும் நிலையிலிருக்கும் எனக்கு அத்தே₃ஶத்திலும் புகமுடியாதபடியிருக்கிற படியை என் வடிவிலே காணுங்கோள் என்கிறேன்.

(சீராரும் மாலிருஞ்சோலை) நல்லோர்களான வைதி₃கர்கள் ஆதி₃காலத்தில் இகழ்ந்திருந்த தெற்குத் திக்கிலே அங்குள்ள தாவரங்களைப்போலே அசையாமல் நின்று.

"புனத்தினைக் கிள்ளிப் புது அவி காட்டி
உன் பொன்னடி வாழ்க வென்று
இனக்குறவர் புதியது உண்ணும்
எழில் மாலிருஞ்சோலையெந்தாய்"
[பெரியாழ்திரு 5-3-5]

**பாரோர் புகழும் வதரி வடமதுரை** **74**
**ஊராய வெல்லா மொழியாமே*நாளவனை**

உலகத்தாரனைவரும் துதிக்கின்ற ஸ்ரீப₃த₃ரிகாஶ்ரமம், வட திசை மதுரை (முதலிய) *ஊர் ஆய எல்லாம் ஒழியாமே*— தி₃வ்ய தே₃ஶங்களாயுள்ளவற்றில் ஓரிடமும் தப்பாமல் (எங்கும் புகுந்து)

---

நீர்மையையுடையனாய் இருக்கிறானிறே; அங்கேசென்று என்வடிவைக் காட்டி எனக்கு முகங்கொடுக்கும்படியெல்லாம் நிலைநிறுத்துகிறேன்.

(திருமோகூர்) "திருமோகூராத்தன்" என்று ஆஶ்ரிதரோடு அவிப₄ாகூ₃ரஸம் அனுப₄விக்கிறானாயிறே இருக்கிறது.

(பாரோர் புகழும் வதரி) என் பேற்றுக்குத் தானே, நானே, தபஸ்ஸு பண்ணினான் ஆர்? என்று என் வடிவைக் காட்டுகிறேன்.

---

**என்கிறபடியே தாழ்ந்தார்க்குங்கூட முகங்கொடுக்கும் ஸௌலப்₄ய ஸௌஶீல்யங்களை உடையவனாயிருக்கிறானன்றோ. அங்கே சென்று என் வடிவைக் காட்டி, எனக்கு முகங்காட்டின அழகை ஊரறியச்சொல்லி, அவன் கு₃ணங்கள் பரத்வ தௌஸ்ஶீல்யங்களை என்று நிலைநாட்டுகின்றேன்.**

**(திருமோகூர்) ''திருமோகூர் ஆத்தன்'' [திருவாய் 10-1-6] [ஆத்தன்–ஆப்தன்] என்று அடியாரோடு மனம் மெய் மொழிகளாலே வேறுபாடின்றி இன்புறும் ஆப்தன் என்று பெயர்பெற்றுக்கிடக்கிறானன்றோ. அங்கே சென்று 'இவனுடைய ஆப்தி இருந்தபடி காணீர்' என்று காட்டுகிறேன்.**

**(பாரோர் புகழும் வதரி) நரர்களுடைய பேற்றுக்கு நாராயணனாகிய தான் தவம் புரிந்த இடம் என்று புவியோர் புகழும்படி இருக்குமிடமன்றோ. அங்கு சென்று, 'தவம் புரிந்த உடம்பு என்னுடையதா இவனுடையதா என்பதைக் கண்படைத்தாரனைவரும் கண்டு சொல்லுங்கள்' என்று என் வடிவைக் காட்டுகிறேன்.**

**(வடமதுரை) முதலில் ஸித்₃த₄ாஶ்ரமமாயிருக்கையில் ஸ்ரீவாமனன் எழுந்தருளியிருந்து தவம் செய்தவிடமாய், ராமாவதாரகாலத்தில்**

(வடமதுரை) ஸித்₃தா₄ஶ்ரமமாய் ஸ்ரீவாமநனெழுந்தருளியிருந்து தபஸ்ஸூபண்ணி, லவணவத₄ம்பண்ணி ஸ்ரீஶத்ருக்₄நாழ்வான் படைவீடு செய்திருந்து ராஜ்யம் பண்ணி, ஸர்வேஶ்வரன் தான் வந்து திருவவதரித்து, இப்படியாலே ப₄க₃வத் ஸம்ப₃ந்த₄ம் மாறுத தே₃ஶமிறே ஸ்ரீமது₄ரை; நான் தோற்றி அத்தையும் கைவிட்டபடி பாருங்கோள் என்கிறேன்.

(ஊராயவெல்லாம் ஒழியாமே) ஓரிடத்தேயிருந்து இரண்டொருகாற் சொல்லி விடுகிறேனோ? சொல்லிச் சொல்லாத ஊரெல்லாம் புகக்கடவேன். வேணுமாகில் என் பின்னே வந்து பட்டோலை எழுதிக்கொள்ளுங்கள். (நான்) அவன் புக்கவிடம் புக்கு அவனை அழிக்கக்கடவனான். (அவனை) என்னையும் இப்பாடுபடுத்தி அர்ச்சகபராதீ₄னனென்று காஹளம் பிடித்திருக்கிறவனை.

---

**ஸ்ரீஶத்ருக்₄னன் லவணனை வதைத்து இதைத் தலைநகராகக்கொண்டு அரசாண்டவிடமாய், பிறகு ஸர்வேஶ்வரன் தானே கண்ணனாய்த் திருவவதரித்தவிடமாய், இப்படி ப₄க₃வத்ஸம்ப₃ந்த₄ம் நீங்காத தே₃ஶம் மதுரை என்பது "மது₄ரா நாம நக₃ரீ புண்யா பாபஹரீ ஶுபா₄" [மது₄ரையென்னும் நக₃ரம் புண்ணியமாயும் பாவத்தையழிப்பதாகவும் சுப₄மாகவுமிருக்கிறது] என்கிறபடியே ப்ரமாண ப்ரஸித்₃த₄மன்றோ. நான் தோன்றினதாலே அவ்விடத்தையும் விட்டு அவன் ஓடிவிட்டதைப் பாருங்கள் என்று அங்கு சென்று காட்டிக்கிறேன்.**

**(ஊராயவெல்லாம் ஒழியாமே) ஓரிடத்திலிருந்து இரண்டொரு தடவை சொல்லி விட்டுவிடுவேனோ? வாய்விட்டுச் சொல்லாத ஊரெல்லாம் புகுந்து புறப்படுவேன். என்னால் சொல்லி மாளாது; வேண்டுமானால் என்பின்னே வந்து, நான் புகுந்து புறப்படும் ஊரையெல்லாம் பட்டோலையிலே எழுதிக்கொள்ளுங்கள். (நான்) அவன் எனக்கு ப₄யந்து ஒளிந்து கொள்ளப் புகுந்தவிடமெல்லாம் சென்று அவனுடைய கொடிகட்டிநிற்கும் கு₃ணங்களையெல்லாம் கெடுத்து அழிக்கவல்ல நான். (அவனை) என்னையும் இப்பாடுபடுத்தி அர்ச்சகபராதீ₄னனென்று திருச்சின்னம் முழங்கிக்கொண்டிருக்கும் அவனை.**

ஓரானை கொம்பொசித் தோரானை கோள்விடுத்த 75
சீரானைச் செங்க ணெடியானைத் தேன் துழாய்த்
தாரானைத் தாமரைபோற் கண்ணானை
எண்ணருஞ்சீர்ப் 76
பேரா யிரமும் பிதற்றிப் பெருந்தெருவே

***ஓர் ஆனை கொம்பு ஒசித்து ஓர் ஆனை கோள் விடுத்த சீரானை***—குவலயாபீட₃மென்ற ஒரு யானையின் கொம்பை முறித்தும்,க₃ஜேந்திரனென்கிற மற்றொரு யானையின் இடரைப்போக்கியும் பக்ஷபாதியெனும் பெருமை பெற்றவனாய், ***செம் கண் நெடியானை***—சிவந்த கண்களையுடையனாய்க் கொண்டு, எனக்கு எட்டாதேயிருப்பவனாய், ***தேன் துழாய்***—(என்னைப் பிரிந்ததால்) தேனொழுகுகின்ற திருத்துழாயாலான, ***தாரானை***—மாலையை யுடையனாய், ***தாமரை போல் கண்ணானை அவனை***—தாமரை போன்ற திருக்கண்களையுடையனான அப்பெருமானைக் குறித்து, ***எண் அரு சீர் பேர் ஆயிரமும் பிதற்றி***—எண்ணமுடியாத (கொடிய) கு₃ணங்களுக்கு வாசகமான (புதிய) ஸஹஸ்ர நாமமொன்றைப் பிதற்றிக்கொண்டு, ***பெரு தெருவே***—பெரிய ராஜவீதிவழியே,

---

இனி அறுமிடத்தையெல்லாம் சொல்லியற வேணுமிறே. (ஓரானை கொம்பொசித்தோரானை கோள்விடுத்த சீரானை) ஆனையான ஏகஜாதித்வம் பொருந்தியிருக்கச் செய்தே, ஓரானையைக் கொல்லுகையாவதென்? ஓரானையை ரக்ஷிக்கையாவதென்? இதிலே கண்டதிறே இவன் ஒருமுலை பாலும் ஒருமுலை சீயுமாய்ப்போரும் பக்ஷபாதி

---

**அர்ச்சாவதாரத்துப் பெருமைகளை அழித்ததோடு நிற்பேனோ? கு₃ணங்கொண்டாடியிருக்கும் அவதாரங்களிலும் புகுந்து கு₃ணத்தைக் கெடுப்பேன் என்கிறாள். (ஓரானை கொம்பொசித்து ஓரானை கோள் விடுத்த சீரானை) இதுவும் ஆனையாய், அதுவும் ஆனையாயிருக்கச் செய்தே, குவலயாபீட₃மாகிற ஓரானையைக்கொன்று, கஜேந்திரனாகிற ஓரானையைக் காப்பாற்றின பக்ஷபாதத்தைப் பார்த்தீர்களா? இதிலிருந்தே தெரியுமே இவன் ஒரு முலை பாலும் ஒருமுலை சீயுமாய்,**

யென்னுமிடம். (சீரானை இப்படி பொரி புறந்தடவி ரக்ஷிக் கிற குணங்களையுடையவனை வெளியிடவிறே புகுகிறேன்.

(செங்கணெடியானை) அகவாயில் வாத்ஸல்யத்துக் கெல்லாம் ப்ரகாசகமான திருக்கண்களைக்கொண்டு எனக் கெட்டாதேயிருக்கிறவனை. சேர்த்துக குளிர்ந்த தண்ணீரை விடாயர்க்கு எட்டாமல் வைப்பாரைப்போலே.

(தேன் துழாய்த் தாரானை) ஆசைப்பட்டாரைப் பிரிந்து தனியிருக்க அமையுங்காணும் மார்பில் மாலை மது ஸ்யந்தியாகைக்கு. (தாமரைபோல் கண்ணனை) ஆசைப் பட்டாரைப் பிரிந்த அன்றுமுதல் நாள்தோறும் செவ்வி பிறக்கும் திருக்கண்களையுடையவனை. (எண்ணருஞ் சீர்ப் பேராயிரமும் பிதற்றி) குணகதநம்பண்ணுகைக்கு ஒரு

---

ஒருகண் வெண்ணையும் ஒருகண் சுண்ணம்புமாயிருக்கிறான் என்பது. சீரானை) வெளியிலே வெல்லம் தடவி இனித்திருப்பதாய், உள்ளே சுவையற்றிருக்கும் பொரிபோலே வெளிவேஷத்திற்கு ரக்ஷிப்பது போலே தோற்றமளிப்பதாய், உண்மையில் நலிவதான குணங்களை உடையவனை உலகெலாம் அறியும்படி வெளியிடப்போகிறேன்.

(செங்கண் நெடியானை) உள்ளேயிருக்கும் வாத்ஸல்யத்தைக் காட்டும் செந்தாமரைக்கண் இருந்து என்ன பயன்? நெடியானுமன்றே இருக்கிறான்; எனக்கு எட்டாதவனுமன்றே இருக்கிறான்! வாசனைத் திரவியங்கள் சேர்த்துக் குளிரவைத்த தண்ணீரை, தாகத்தோடு வரு வார்க்கு எட்டாமல் வைப்பவரைப்போலே எனக்கு எட்டாதபடியன்றே திருக்கண்களை வைத்திருக்கிறான். (தேன்துழாய்த்தாரானை) ஆசைப் பட்டாரைப் பிரிந்து தனியேயிருக்கும்போதுதான் இவன் மார்பில் மாலை தேன் சொரியும் போலும்! தேன் துழாய்த் தாரானுமிருந்தும் தேன்துழாய் தாரான் (தராதவன்) ஆகவேயிருக்கிறான். (தாமரை போல் கண்ணனை) ஆசைப்பட்ட என்போன்றாரைப் பிரிந்ததிலிருந்து தொடங்கி தினந்தோறும் புதிதுபுதிதாகக் காட்சியளிக்கும் திருக்கண் களை உடையவனை. (எண்ணருஞ்சீர்ப் பேராயிரமும் பிதற்றி) குணத் தைச் சொல்லுவதற்கு எண்ணவெண்ண இனிக்கும் ஒரு ஸ்ரீஸஹஸ்ர நாமம் உண்டன்றே; அப்படியே குணக்கேட்டுக்கும் ஒரு ஸ்ரீஸஹஸ்ர நாமம் பண்ணுகிறேன்.

**ஊரா ரிகழிலு மூரா தொழியேன்நான்** 77
**வாரார்பூம் பெண்ணை மடல்.**

***ஊரார் இகழிலும்***—(என்னை) ஊரிலுள்ளாரெல்லாரும் பழித்தாலும், ***நான்***—நான், ***வார் ஆர் பூ பெண்ணை மடல் ஊராதொழியேன்***—நீண்டு அழகிய பனையைக் கொண்டு மடலூர்வதை நிறுத்த மாட்டேன் (மடலூர்ந்தே தீருவேன்.)

---

ஸ்ரீஸஹஸ்ரநாமமுண்டிறே; அப்படி கூனஹாங்கிக்கும் ஒரு ஸ்ரீஸஹஸ்ரநாமம் பண்ணுகிறேன்.

நீ சொல்லப்படுகிற ஸஹஸ்ரநாமந்தன்னைச் சொல்லிக் காணுயென்ன, நால்வரிருவர்க்குச் சொல்லிவிடுவேனே ஒரு மூலையிலிருந்து? இல்லையாகில் என்செய்வாயென்ன; (பெரும் தெருவே) நடுத்திருவீதியிலே புறப்படக்கடவேனென்கிருள்: (ஊராரிகழிலும்) "ஊராரிகழ்ந்திடப் பட்டாளே?" என்று அவளை ஊரார் கொண்டாடினாற் போலே என்னையும் தலையாலே சுமப்பர்கள்; சுமவாதே இகழ்ந்தார்களேயாகிலும். (ஊராதொழியேன் நான்) இவர்கள் கொண்டாடாதே பழிசொன்னார்களேயாகிலும், நான் மடலூருகை தவிரேன். (வாரார் பூம் பெண்ணை மடல்) கையிலே ப்ரஹ்மாஸ்த்ரமிருக்கச்செய்தே எதிரிகள் கையிலே எளிவரவுபடுவாரைப்போலே, என்கையிலே மட

---

**'நீ சொல்லப்போகிற ஸஹஸ்ரநாமத்தைச் சொல்லிக்காட்டு' என்ன, ஒரு மூலையிலே முடங்கியிருந்து நாலுபேர் இரண்டுபேருக்குச் சொல்லி விட்டுவிடுவேனு? இல்லையாகில் என்னசெய்வாய்? என்ன,—(பெரும் தெருவே) நடுத்தெருவிலே அதிலும் ராஜவீதியிலே புறப்பட்டுப்போகிறேன் என்கிருள். (ஊரார் இகழிலும்) ''ஊரார் இகழ்ந்திடப்பட்டாளே'' [சிறிய திருமடல் 68] என்று அவளை ஊரார் கொண்டாடினாற்போலே என்னையும் தலையாலே சுமந்து கொண்டாடுவார்கள். அப்படிக்கொண்டாடாமல் இகழ்ந்தார்களேயாகிலும், நான் மடலூர்வதை விடமாட்டேன். (வாரார்பூம் பெண்ணை மடல) கையிலே ப்ரஹ்மாஸ்த்ரமிருக்க, எதிரிகளான இந்திரஜித் முதலானுசிடம் தாழ்ச்சியுற்ற அவர்களைப்போலே, என் கையில் பனைமடலிருக்க**

லிருக்க அபி₁மதம் கிடையாதிருக்கவேணுமோ எனக்கு? (வாரார் பூம் பெண்ணை மடல்) ஒழுகு நீண்டு தூ₃ர்ஶநீயமான பனைமடலிருக்கிறபடி கண்டறிதியே? ப்₃ரஹ்மாஸ்த்ர மிருக்கிறபடி கண்டறிதியே?

பரமகாருணிகரான பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்த
சிறிய திருமடல் வ்யாக்₂யானம் முற்றிற்று.
பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே ஶரணம்.

## கம்பர் பாடல்

**ஊரா தொழியே னுலகறிய வொண்ணுதலீர்**
**சீரார் முலைத்தடங்கள் சேரளவும்—பாரெல்லாம்**
**அன்றோங்கி நின்றளந்தாள் நின்ற திருநறையூர்**
**மன்றோங்க வூர்வன் மடல்:**

[ஒளிபொருந்திய நெற்றியை உடையவர்களே! உலகளந்த பெருமானை எனது அழகிய முலைத்தடங்கள் அணையும் வரையில், நான் உலகறிய மடலூராமலிருக்கமாட்டேன். அப்பெருமான் நின்ற திருநறையூர் நாற்சந்தி அறிய மடலூர்வேன்.]

---

என் விருப்பம் நிறைவேறுமலிருக்கவிடுவேனோ? (வாரார்பூம் பெண்ணை மடல்) நீண்டதாய் அழகியதான பனைமடல் என் கையி லிருப்பதைப் பார்த்தீர்களா? என்னுடைய ப்₃ரஹ்மாஸ்த்ரமிருந்த படியைக் கண்டீர்களோ?

ஸ்ரீவைஷ்ணவ ஸுத₃ர்ஶனம் பத்திரிகாசிரியரான,
ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமித₃ாஸன் இயற்றிய
சிறியதிருமடல் வ்யாக்₂யானம் முற்றிற்று.



